# கலையும் வாழ்வும்

மா. ரா. இளங்கோவன், பி.ஏ., (ஆனர்சு)
*தமிழ் விரிவுரையாளர், செந்தமிழ்க் கல்லூரி,*
*மதுரைத் தமிழ்ச் சங்கம், மதுரை.*

மலர் நிலையம்
133. பிராட்வே... சென்னை-1

# முகவுரை

சிலப்பதிகார நிகழ்ச்சிக்கு அடிப்படைக் காரணமாக இருப்பவர் **கோவலன், கண்ணகி, மாதவி** என்னும் மூவராவர். இம் மூவராற்றுன் கதையின் பெரும்பகுதி நிகழ்ந்துள்ளது. கண்ணகி கோவலன் மனைவி ; மாதவி கோவலனது காமக்கிழத்தி. இளங் கோவடிகள் பாடிய சிலப்பதிகாரம் என்னும் காவியத்தைக் கொண்டு இம்மூவருடைய பண்பியல்புகளை "இலக்கியத் திறனாய்வு" என்னும் முறையில் ஆராய்ந்து அறிவதே இந்நூலின் நோக்கமாகும்.

"**கலையும் வாழ்வும்**" என்னும் இந்நூலில் பதினான்கு ஆராய்ச்சிக் கட்டுரைகள் உள்ளன. அவற்றுள் சில கண்ணகியைப் பற்றியன ; சில கோவலனைப் பற்றியன ; வேறு சில மாதவியைப் பற்றியன. இவை அனைத்தும் இம்மூவரைப் பற்றிய வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் அவர்தம் சிறப்பியல்புகளையும் குறைபாடுகளையும் நன்கு எடுத்துக் காட்டவல்லவை. ஒரு காவியத்தை எந்த முறையில் ஆராய்ந்து கற்கவேண்டும் என்பதை இக்கட்டுரைகள் ஒருவாறு உணர்த்தவல்லவை.

**பி. ஏ. ஆனர்சு** வகுப்பில் இப் பெருங்காவியத்தைப் பேராசிரியர் **க. கோவிந்தராசனார்** (எம்.ஏ., எல்.டி.), பேராசிரியர் **ச. ஆறுமுகனார்** (எம். ஏ., எல். டி., எம். ஓ. எல்.), பேராசிரியர் **தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்** (எம்.ஏ. பி.எல்., எம்.ஓ.எல்.), ஆகியோர் கற்பித்தனர். இக்காவியத்தில் தோன்றிய ஐயங்களை எனது மதிப்பிற்குரிய பேராசிரியர் **டாக்டர் மு. வரதராசனார்** (எம். ஏ., எம். ஓ. எல்., பி'எச். டி.) அவர்கள் அவ்வப்போது

போக்கியருளினூர்கள். இப்பெரியார்களுக்கு எனது உளமார்ந்த நன்றி உரியதாகும்.

இந்நூலில் உள்ள கட்டுரைகளை எழுதுமாறு தூண்டிய "கலைமன்றம்" ஆசிரியர் விருதை **ந. இராமசாமி** அவர்களுக்கும், இந்நூற் கட்டுரைகளுட் சிலவற்றை வெளியிட்டுதவிய **"தமிழ் நாடு," "செந்தமிழ்," "கலைமன்றம்"** இதழாசிரியர்களுக்கும் என் நன்றி உரியது. இந்நூலை முழுவதும் பார்வையிட்டுத் திருத்தம் செய்துதவிய என் அருமைத் தந்தையார் **டாக்டர் மா. இராச மாணிக்கனூர்** (எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி.) அவர் களுக்கு என் வணக்கமும் நன்றியும் உரிய. இதனை நன்முறை யில் வெளியிட்ட **மலர் நிலையத்தாருக்கு** என் மனமார்ந்த நன்றி உரியது.

இவ்வாராய்ச்சி நூலில் காணப்படும் குறைகளை நீக்கி நலத்தை மட்டும் கொள்ளுமாறு தமிழ்ப் பெருமக்களைப் பணி வோடு வேண்டுகின்றேன்.

செந்தமிழ்க் கல்லூரி,
மதுரைத் தமிழ்ச் சங்கம்,
மதுரை.

**மா. ரா. இளங்கோவன்**



தமிழ்வேள்

திரு. பி. டி. இராசன் அவர்கள்




## உரிமையுரை

சோழ நாட்டுத் தலைநகரான காவிரிப் பூம்பட்டினத்தில் பிறந்து வளர்ந்த கண்ணகி, பாண்டிய நாட்டுக் கோநகரான மதுரையில் தன் பத்தினித் தன்மையை மெய்ப்பித்துச் சிறப்படைந்தாள். **மதுரை மாநகரம்**, அவள் வழிபடு தெய்வம் ஆனதற்குக் காரணமாய் அமைந்தது. எனவே, மதுரைக்கும் கண்ணகி வரலாறு கூறும் சிலப்பதிகாரத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை அறியலாம்.

சிலப்பதிகாரத்தின் சிறந்த பாத்திரங்களான கண்ணகி, மாதவி, கோவலன் என்னும் மூவரைப் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளைக் கொண்ட இந்நூலை, பீடுமிக்க மாடமதுரையில் உள்ள தமிழ்ச் சங்கத்தை இன்று நன்முறையில் வளர்த்து வரும் **தமிழவேள் திரு. பி. டி. இராசன்** அவர்களுக்கு உள்ளன்புடன் உரிமையாக்குகின்றேன்.

இவர்கள் பெயரும் புகழும் வாழ்க !

# பொருளடக்கம்

# 1. சிலப்பதிகாரம்

ஐம்பெருங் காப்பியங்கள் எனப் போற்றப்படும் நூல்களில் ஒன்றே சிலப்பதிகாரம். சிலப்பதிகாரம் மக்கள் மன்றத்தில் இறவாது போற்றிப் படிக்கப்படும் நூல்களுள் சிறந்ததாக உள்ளது. நீண்ட கதை வடிவில் செய்யுள் உருக்கொண்டு விளங்கும் சிலப்பதிகாரம் படிக்கப் படிக்கச் சுவைதரும் அளவில் ஆசிரியரால் எழுதப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரக் கதை செல்வக் குடும்பமொன்றின் கதையே யாகும். புகார் நகரத்தில் பிறந்த வணிகன் ஒருவனது மகனுக்கும் மற்ருெரு வணிகனின் மகளுக்கும் நடந்த திருமண விழாவுடன் தொடங்கும் நூல் அவர்களுடைய வாழ்வியலேயே விளக்கிக் கூறுகிறது.

சிலம்பின் ஆசிரியர் இளங்கோவடிகள் இயற்கை, சமுதாயம் இரண்டையும் வாழ்த்தி நூலேத் தொடங்குகிறுர். செவ்வேளேயோ பிற கடவுள்களேயோ வாழ்த்தாமல் இயற்கையையும் சமுதாயத்தையுமே வாழ்த்தி நூலேத் தொடங்குமளவுக்கு ஆசிரியர் உயரிய மனம் கொண்டவராகக் காண்கிறுர். சிலப்பதிகாரம் மன்னர்கள் வரலாற்றைக் கூற எழுந்த காப்பியமன்று என்பதையும், அது குடிமகன் ஒருவன் வரலாற்றைக் கூறும் காப்பியமே என்பதையும் உறுதி செய்ய இந்த வாழ்த்துப் பகுதியும் துணே செய்கின்றது.

சோழ நாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தில் கண்ணகியின் திருமணத்தையும், பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையில் கண்ணகியின் வீர உரையையும், சேர நாட்டின் தலை நகராகிய வஞ்சி மாநகரில் கண்ணகியின் தெய்வ நிலையையும் நாம் கண்டும் கேட்டும் உணரும் வகையில் ஆசிரியர் கண்ணகியின் ஒப்புயர்வற்ற ஓவியத்தைத் தீட்டியுள்ளார். இந்த நிலையில் கண்ணகியின் புகழைக் கலையிலே அமைத்துக் காவியமாக்கிய ஆசிரியர், நூலுக்குக் "கண்ணகி" என்று பெயரிடாமல் "சிலப்பதிகாரம்" எனப் பெயரிட்டது ஏன் என்பதைக் காணுவோம்:

மணிமேகலை என்ற பெயர், மணிமேகலையின் வரலாற்றைக் கொண்ட நூல் என்பதைத் தெளிய வைக்கின்றது. நூலினுள்ளும் மணிமேகலையின் வரலாறே கூறப்பட்டுள்ளது. அவ்வாறே கண்ணகியின் வரலாறு கூறப்பட்டுள்ள நூலினை ஆசிரியர் **கண்ணகி** என்று பெயரிடாது சிலப்பதிகாரம் என்று ஏன் பெயரிட்டார் என்பதை அறிதல் தகும்.

"அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்று ஆவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம் (பதிகம்)

உண்மை எனக் காட்டுவதுதான் நூலின் குறிக்கோள் என அதன் பதிகம் கூறுகின்றது. அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும் என்னும் உண்மை, மதுரை மன்னன் நெடுஞ்செழியன் மாண்டதால் தெளிவாகின்றது. உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தல் என்னும் உண்மை கண்ணகியைப் பலரும் போற்றுவதாலும், வானவரே வந்து அவளை விண்ணுலகுக்கு அழைத்

துச் சென்றனர் என ஆசிரியர் கூறுவதாலும் புலனு கின்றது. ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்னும் உண்மையை, அறச்செயல்கள் பல செய்த கோவலன் அழிந்து பட்டதும், நெறி பிறழாப் பாண்டியமரபில் வந்தவன் சிந்தியாது செயலாற்றியதும் மெய்ப்பிக்கின் றன. இந்த மூன்று உண்மைகள் மூன்று நிகழ்ச்சி களால் விளக்கமுறுகின்றன.

புகார்க்காண்டத்தில் மக்களுள் சிறந்தவளாக விளங்கிய கண்ணகி, மதுரைக்காண்டத்தில் மனித நிலை யைக் கடந்தவளாகக் காணப்படுகிறுள். அவளே வஞ் சிக் காண்டத்தில் வரந்தரும் நிலையைப்பெற்று நம் வழி பாட்டுக்கு உரியவளாகின்றுள். இங்ஙனம் மூன்று காண்டங்களிலும் வெவ்வேறு நிலைகளில் காட்சியளிக் கும் கண்ணகியின் வரலாற்றையே கொண்டு விளங் கும் நூலுக்கு ஆசிரியர் சிலப்பதிகாரம் என்று பெய ரிட்டது பொருத்தமுடையதுதானு ?

இந்த வினுவுக்குரிய விடையினைக் காண இனி முனைவோம் :

கோவலன் மாதவியின் ஆடலிலும் பாடலிலும் மயங்கி அவளை அடைந்து, விடுதல் அறியா விருப்புக் கொண்டு வாழத்தொடங்கினுன் ; நாளடைவில் அவளி டம் ஐயங்கொண்டு அவள்செயல் முறைகளைநடிப்பென எண்ணி வந்தான் ; இறுதியில் கானல்வரிபாடிய பின்பு, "மாயப்பொய் பலகூட்டும் மாயத்தாள்" என்று மாத வியைப் பழித்துக் கண்ணகியை நாடி வந்தான். அவளி டம், "சலம் புணர்க் கொள்கை சலதி" என்று மாத வியைப் பழித்துத் தன் வறுமை நிலையைக் கூறினுன்.

கோவலனைப் பல ஆண்டுகளாகப் பிரிந்து வாழ்ந்த வள் கண்ணகி. அவனை இனிப்பெறுதல் இயலாது என்

பதை அறிந்தும், அவள் தனக்கே இயல்பாய் அமைந்த பொறுமைக் குணத்தை மேலும் வளர்த்துக்கொண்டு, தன் வருத்தத்தைப் பிறர் அறியாதவாறு மற்றவர் முன்னிலையில் நகை முகங்காட்டி நடித்துவந்தாள். கோவலன் வருவதற்கு முன்னர் அவள் கனவொன்று கண்டிருந்தாள். அக்கனவு பற்றிய எண்ணம் அவளிடம் இருக்கையிலேயே கோவலன் வந்து சேர்ந்தான். வந்தவன் மாதவியைப் பழித்ததையும், அத்துடன் தனது பொருட்குவியல் குறைந்து தொலைந்ததையும் கூறியதைக் கேட்டாள் கண்ணகி. கோவலன் இவ்வாறு கூறியது, மாதவிக்குப் பொருள் தரவேண்டும்— அதற்குத் தேவைப்படும் பொருளில்லை என்ற கருத்தினைக் கொண்டுள்ளது என எண்ணியவாறு; 'சிலம்புள, கொண்மின்' என்று நகை முகத்துடன் கூறினாள். '**சிலம்புள**' என்ற சொற்கள் கோவலனுக்கு உணர்ச்சியை அளித்திருக்கவேண்டும். கடந்த கால வாழ்க்கையை எண்ணிப்பார்க்க வேண்டுவதில்லை என்றும், மனைவியின் சிலம்பை முதலாகக்கொண்டு பொருளீட்டி இழந்த தொகையைப்பெறலாம் என்றும், புதுவாழ்வு வளமாக அமையுமென்றும் அவன் எண்ணி யிருக்கக்கூடும். 'சிலம்புள' என்று கண்ணகி கூறியதைக் கேட்டதும், அவன் அதனை முதலாகக் கொண்டு பொருளீட்ட வேண்டும் என்ற உறுதியான எண்ணங் கொண்டு, மதுரை மூதூர் ஏகவேண்டுமெனக் கூறிக் கண்ணகியையும் உடன்வருமாறு அழைத்தான்.

கோவலன் புகாரைவிட்டு மதுரைக்குச் செல்ல அடிப்படைக் காரணமாக அமைந்ததுதான் சிலம்பு. மதுரையிலேயே கோவலன் சிலம்பை விற்று வரச் சென்றபோது, மாதேவியின் சிலம்பினைக் களவாடிய

பொற்கொல்லன், கோவலன் விலை மதிப்பிட வேண்டித் தந்த சிலம்பினைக்கண்டு தன் குற்றம் மறைக்க எண்ணி அதனைக் கருவியாகக்கொண்டான். மன்னனும் மாதேவியின் சிலம்பைக் களவாடியவன் கைப்பட்டான் எனக் கூறக்கேட்டதும் சிலம்புடையவனைக் கொன்று சிலம்பு கொணருமாறு பணித்தான். கோவலன் கொல்லப்பட்டான். கோவலன் சிலம்பால்தான் கொலையுண்டான்.

சிலம்பினைக் கொண்டுதான் கண்ணகி பாண்டியன் முன்னர் வழக்குரைக்கின்றாள். சிலம்பு ஒன்றுதான் அவள் செய்த வஞ்சினங்களைக் காத்தது. அது ஒன்றுதான் பாண்டிய மன்னனைத் தான் செய்த தவற்றை எண்ணிப் பார்க்கச் செய்தது; இறக்கச் செய்தது. மன்னவன் இறப்பைக்கண்டு மாதேவியும் உயிர் துறந்தாள். இதற்கும் அடிப்படைக் காரணமாய் அமைந்தது சிலம்புதான். கண்ணகி வழக்கில் வென்றதற்குச் சிலம்பின் செல்வாக்கே காரணமாய் அமைந்தது என்பதை,

> "செஞ்**சிலம்பு** எறிந்து தேவி முன்னர்
> வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினி"

என்ற அடிகள் வாக்கால் உணரலாம். சிலம்பின் வெற்றியை ஆசிரியர் மறக்க முடியவில்லை. சிலம்பைப் புறக்கணிக்க முடியாத நிலையில் அவர் நிலை அமைந்துவிட்டது என்பதைப் பின்வரும் வழக்குரை காதை வெண்பாக்கள் உணர்த்துகின்றன:—

> "காவி உகுநீரும் கையில் தனிச்சிலம்பும்
> ஆவி குடிபோன அவ்வடிவும்—பாவியேன்
> காடெல்லாஞ் சூழ்ந்த கருங்குழலும் கண்டஞ்சிக்
> கூடலான் கூடா யினன்."
> "மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
> கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும்—வையைக்கோன்
> கண்டளவே தோற்றான் காரிகைதன் சொற்செவியில்
> உண்டளவே தோற்றான் உயிர்".

இளங்கோவடிகள் கண்ணகியின் வரலாறு அறிந்த வரலாற்றைக் காண்பதும் நூலின் பெயர்க்குரிய காரணம் காணுவதற்குத் துணை செய்வதாகும்.

சாத்தனுர் என்பவர் மணிமேகலையின் ஆசிரியர். இவர் மூலமாகவே இளங்கோவடிகளுக்குக் கண்ணகியின் வரலாறு தெரியலாயிற்று.

> " தீவினைச் **சிலம்பு** காரணம் ஆக
> ஆய்தொடி அரிவை கணவற்கு உற்றதும்
> வலம்படு தானை மன்னன் முன்னர்ச்
> **சிலம்பொடு** சென்ற சேயிழை வழக்கும்
> **செஞ்சிலம்பு** எறிந்து தேவி முன்னர்
> வஞ்சினம் சாற்றிய மாபெரும் பத்தினி
> அஞ்சில் ஓதி அறிகெனப் பெயர்ந்து
> முதிரா முலைமுகத் தெழுந்த தீயின்
> மதுரை மூதூர் மாநகர் சுட்டதும்"
> —(காட்சிக் காதை, வரி. 69-77)

என்ற அளவில்தான் கண்ணகியின் வரலாற்றைச் சாத்தனுர் கூறினர். இந்த அளவில்தான் கண்ணகி பற்றி ஆசிரியரும் அறிந்திருந்தார். சாத்தனுர் கூறிய இந் நிகழ்ச்சிகளுள் மதுரை அழிந்த ஒன்று தவிர ஏனைய எல்லாம் சிலம்பின் காரணமாகவே நிகழ்ந்தன என்று தெரிகிறது. சிலம்பு காரணமாகவே அவை நிகழ்ந்தன என்று அறுதியிட்டுக் கூறுவதைப் போலச் சாத்தனுர் மூன்று முறை **சிலம்பு** என்னும் சொல்லைக் கூறியுள்ளார்.

மனைவியின் கருத்துப்படி செங்குட்டுவன் இமயம் சென்று, காவா நாவிற் கனக விசயரை வென்று, கல்லெடுத்துக் கண்ணகிக்குப் படிமம் சமைத்து வழிபாடு நடத்திய நாள் வரை சாத்தனுர் கூறிய அளவு, கதை

யினைத் தவிரப் புதியதாக எப்பகுதியையும் அவர் கேட்டிருத்தல் இயலாது. பத்தினித் தெய்வ வழிபாட்டின் போது மாடலனும் தேவந்தியும் கண்ணகியின் வாழ்க்கையின் முற்பகுதியைக் கூறியிருக்கக் கூடும். கண்ணகி வாழ்க்கையின் முற்பகுதியை அறிந்தபோது ஆசிரியர் உள்ளத்தில் சிலம்பு காரணமாக நடந்த நிகழ்ச்சிகளே நிலைபெற்றிருக்க வேண்டும். இறுதியில் அவர் கண்ட காட்சியும் சிலம்புடன் கண்ணகி தந்த காட்சிதான்.

கண்ணகி சிலம்புடன் தந்த காட்சியைக் கண்டு செங்குட்டுவன் வியந்து கூறுவதாக அமைந்துள்ள பகுதியைக் காண்போம்:

> "என்னே யிஃதென்னே யிஃதென்னே யிஃதென்னேகொல்
> பொன்னஞ் **சிலம்பிற்** புனைமே கலைவளைக்கை
> நல்வயிரப் பொற்றோட்டு நாவலம் பொன்னிழைசேர்
> மின்னுக் கொடியொன்று மீ விசும்பிற் றோன்று மால்"
>
> —(வாழ்த்துக் காதை 9)

கண்ணகி வாழ்க்கை சிலம்பிலிருந்து பிரிக்க முடியாதவாறு பின்னப்பட்டிருந்ததை உணர்ந்த ஆசிரியர், சிலம்பினைத் தொடர்ந்து அதிகரித்துள்ள கண்ணகியின் வாழ்வியலைக் கூறும் நூலுக்குச் **சிலப்பதிகாரம்** எனப் பெயரிட்டார் என்று கொள்ளலாம்.

புகார்க்காண்ட நிகழ்ச்சிகளுக்கும் மதுரைக் காண்ட நிகழ்ச்சிகளுக்கும் சிலம்பு காரணமா யமைந்து அவற்றோடு பிரிக்க முடியாத நிலையையும் பெற்றுவிடுகின்றது. வஞ்சிக் காண்டத்திலும் கண்ணகி சிலம்புடன் காட்சி யளித்துத் தன் பிறப்புணர்த்தி வரந்தருகிறாள். இவ்வாறு சிலம்பினால் விளைந்த செயல்களை விளக்கிக் கூறிச் செய்யப்பட்டுள்ள நூலுக்குச் **சிலப்பதிகாரம்**

என்னும் பெயர் இருப்பது சாலப் பொருத்தம் உடையதேயாம்.

சிலப்பதிகாரம் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுக் கதையினை அறிந்து சுவைத்து மகிழும் அளவில் அமைந்துள்ளது. **முதற் பகுதி**யில் கோவலன்—கண்ணகி திருமணத்தைக் காண்கிறோம். கோவலன் கண்ணகியைப் பாராட்டுவதும் கண்ணகி ஏதும் பேசாதிருத்தலும் நம் மனத்தை விட்டு நீங்கா வண்ணம் நிலைபெற்ற ஓவியமாகத் திகழ்கின்றன.

**இரண்டாம் பகுதி**யில் அவன் மாதவியின் உறவு பெற்று வாழ்வதை அறிகிறோம். இப்பகுதியில் மாதவியின் இளமையையும் எழிலையும் அவள் கற்ற கலைகளையும் கூறத் தொடங்குகிறார் ஆசிரியர். மாதவியிடம் அவன் கொண்ட அன்பு அளவற்றதா யிருந்தது. எனவேதான் வடு நீங்கு சிறப்பின் மனையகம் மறந்து **மாதவியிடம்** விடுதலை அறியா விருப்பினன் ஆயினன்.

**மூன்றும் பகுதி** கோவலன் மீண்டும் கண்ணகியை அடைவதையும் அவளிடம் தான் செய்த நெறியல்லாச் செயல்களுக்கு வருந்தி மன்னிப்பு வேண்டியதையும், அவள் சிலம்பைக் கொண்டு மதுரைக்குப் போகவிருப்பதையும் தெரிவிக்கின்றது. இப்பகுதியினைக் கண்ணகி கண்ட கனவொன்றைக் கொண்டு தொடங்கியுள்ளார் ஆசிரியர்.

**நான்காம் பகுதி** மதுரையில் மாதரி வீட்டிலிருந்து கோவலன் சிலம்புடன் புறப்பட்டுச் சென்றதும், பொற் கொல்லனால் ஏமாற்றப்பட்டுக் கொலை செய்யப்பட்டதும், கண்ணகி கள்வனல்லாத் தன் கணவனைக் 'கள்வன்' எனக் கூறிக் கொலை செய்த பாண்டியன்முன் வழக்குரைத்ததும், அதில் வெற்றி

பெற்றதுடன் கண்ணகி ஆறுதலடையாது மதுரை நகரினை எரியுண்ணச் செய்ததும் ஆகிய பல நிகழ்ச்சிகளைக் கூறுகின்றது.

**ஐந்தாம் பகுதி** கண்ணகியின் தெய்வ நிலையினையும், அவளை வழிபடக் கூடியிருந்த மன்னவர்களையும், கண்ணகி வரம் தந்ததையும், முற்பிறப்புணர்த்தியதையும் விளங்க உரைக்கின்றது.

இவ்வைந்து பிரிவுகளுள் சிலப்பதிகாரக் கதை அமைந்துவிடுகின்றது.

## 2. பூம்புகாரில் கண்ணகி

"நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்று இளங்கோவடிகளின் காவியத்தைப் பாராட்டினார் பாரதியார். சிலப்பதிகாரம் பற்றிய செய்திகளைச் சென்ற பகுதியிற் கண்டோம். இனிச் சிலப்பதிகாரக் காப்பிய உறுப்பினரைப் பற்றி ஆய்ந்தறிவோம்:

ஓர் இலக்கியத்தை நன்கு படித்துப் பயன் பெற வேண்டுமாயின், முதலில் அவ்விலக்கியத்தை உணர்ந்தறிய வேண்டும் என்றும், பின்னர் ஆராய்ந்தறிய வேண்டும் என்றும் அறிஞர் கூறுவர். உணர்ந்தறிதல், ஆய்ந்தறிதல் என்பன யாவை?

" **உணர்ந்தறிவது** என்பது இதயங்கொண்டு இலக்கியத்தை உணர்வது; புலவர் உணர்ந்தவாறே கற்பவரும் உணர முயல்வது; நூல் எழுதிய காலத்துச் சூழ்நிலையுட் புகுந்து நின்று புலவர் காட்டியவாறே காண்பது; ஏன், எவ்வாறு என்ற கேள்விகளைக் கேளாது தன்னை மறந்து கற்பது; அறிவு குற்றேவல் செய்ய, உணர்வு முன்னின்று உணர்த்த உணர்ந்து கற்கும் முறையாகும் இது."

" **ஆய்ந்தறிவது** என்பது மூளைகொண்டு நுணுகி நுணுகி இலக்கியத்தைக் கற்பது; புலவர் உணர்த்தியவற்றை இன்றைய உண்மைகளைக் கொண்டு சீர் தூக்கிக் கற்பது; அவர் காலத்து வாழ்க்கையை இக்

காலத்து வாழ்க்கையோடு ஒப்பிட்டு ஆராய்வது; எதற்கும் காரண காரியப் பொருத்தம் கொண்டு கற்பது; அறிவு தலைமை தாங்க, உணர்வு உற்றுழி உதவ, ஆராய்ந்து கற்கும் முறையாகும் இது.''

(டாக்டர் மு. வரதராசனார் "கண்ணகி,'' பக்கம் 41)

இலக்கியத்தை உணர்ந்தறியும் முறையையும் ஆய்ந்தறியும் முறையையும் கண்டோம். ஓர் இலக்கியத்தை உணர்ந்தறியப் பழகிய பின்னரே ஆய்ந்தறிய முற்படுதல் வேண்டும். கண்ணகியின் பண்பு நிலையை ஆராய விரும்புவோர், ஆசிரியர் காட்டுமாறு கண்ணகியைக் காணுதல் வேண்டும். அவ்வாறு காணுகையில் காய்தல், உவத்தல் அகற்றிக் காணுதல் வேண்டும்; குணம் நாடிக் குற்றமும் நாடும் பண்பு வேண்டும்; மிகையாக உள்ள குணத்தை மட்டுமே போற்றிப் பயன் பெறவேண்டும்.

சிலப்பதிகாரம்,

"அரைசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற் றுவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந் தூட்டும்''

என்பன உண்மை என்பதை உலகில் நிலைநாட்டும் பொருட்டு எழுந்த ஒரு நூல் என்பதைச் சென்ற இதழில் கண்டோம்.

சிலப்பதிகாரத்தின் பெருமைக்கெல்லாம் கண்ணகியின் கற்பின் பெருமையே காரணமாம் என்று கூறுதல் மிகையாகாது.

கண்ணகியை ஆசிரியர் நூலின் தொடக்கத்தில் மணப் பெண்ணாக அறிமுகப்படுத்துகின்றார்; அறி

முகப்படுத்தும் பொழுதே அவளைப் பற்றிய பண்புகளை நாமறியச் செய்கிறார்; கண்ணகியின் அழகைப் போற்று வதுடன் வடமீன் போன்ற கற்புத் திறத்தையும் தொழத்தக்க குணச் சிறப்பையும் கூறிக் கண்ணகியைப் பற்றிய உயர்ந்த எண்ணத்தை நாம் கொள்ளுமாறு செய்கின்றார்.

"போதிலார் திருவினாள் புகழுடை வடிவுஎன்றும்
தீதிலா வடமீனின் திறம்இவள் திறம்என்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங் குணத்துக்
காதலாள் பெயர்மன்னும் கண்ணகிஎன் பாள்மன்னோ"
(மங்கல வாழ்த்து, வரி 26-29)
"காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறுக......" (மங்கல வாழ்த்து, வரி 61-62)

என அவையோர் வாழ்த்தக் கோவலனும் கண்ணகியும் மணமக்களாயினர்.

சில ஆண்டுகளில் கோவலன் கண்ணகியைப் பிரிந்து மாதவியின் உறவு கொண்டு கண்ணகியை மறந்து வாழலானான். கோவலன் மாதவியுடன் வாழ்ந்த பல ஆண்டுகள் கண்ணகி தன் துயரைப் பிறர் அறியாத வகையில் ஒழுகிவந்தாள்.

மாமனும் மாமியும் தன் கணவனின் போற்றா ஒழுக்கத்தால் பெரிதும் வருந்துகிறார்களே என்று வருந் தினாளே தவிர, அவள் திண்மை உள்ளத்துடன்தான் இருந்தாள் ; மாமனும் மாமியும் தன் துயரை அறியா திருக்க அவர்கள் முன் நகைமுகம் காட்டி வந்தாள் ; "காமனை வணங்குவோர் கணவனைப் பிரிதலறியார்" என்று சொன்ன அவளது தோழி தேவந்திக்கும் உடன் படாது, "பீடன்று" என்று பெருமிதமாகப் பதிலுரைத் தாள். கற்புடைய பெண்கள் கணவனல்லாது பிற

தெய்வங்களைச் சங்ககாலத்தில் தொழுதனரில்லை. வள்ளுவரும்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை"

என்று இக்கருத்தையே வலியுறுத்தலை காண்க.

கோவலனது பிரிவுக்காலத்தில் கண்ணகியின் சீரடிகள் சிலம்பற்றிருந்தன. அவளுடைய கயலொத்த நெடுங் கண்கள் அஞ்சனத்தை மறந்தன. பவளவாள் நுதல் (நெற்றி) திலகம் இழந்தது. கூந்தல் நெய்யணி மறந்தது. மங்கல அணி (இயற்கையழகு) ஒன்று தவிரப் பிற அணிகள் யாவும் அவளால் மறக்கப்பட்டன. காலையில் அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலையில் மலரும் காதல் நோயால் அவள் நலிவுற்றாள்.

இத்துயர நிலையில் ஆண்டுகள் பல கடந்தன. வினைப்பயனால் கோவலன் மாதவியுடன் மாறுபட்டு, கண்ணகியிடம் மீண்டு வருகிறான்; பின்னர்க் கண்ணகியின் சிலம்பொன்றினைக் கொண்டு, மதுரை மூதூர் சென்று, அதனை விற்றுப் பொருளீட்டத் துணிந்து, அவளுடன் மதுரையேக முடிவு செய்தான். கண்ணகி அம்முடிவுக்கு ஒத்துப் புறப்பட்டாள். இத்துடன் **புகார்க்காண்டம்** முடிவடைகின்றது.

புகார்க்காண்டத்தில் மக்களுள் சிறந்தவளாய்க் கண்ணகி காட்சியளிக்கின்றாள். இக்காண்டத்தில் அவள் பொறுமையும் மனத்திண்மையும் உடையவளாக விளங்குகின்றாள். கண்ணகியை அறிமுகப்படுத்தும் பொழுது அவள் அழகு, கற்பு ஆகிய பொதுப் பண்புகளை மட்டுமே ஆசிரியர் குறிப்பிட்டார். கோவலன் அவளை விட்டுப் பிரிந்ததும் பொறுத்தற்கு அரிய துன்பத்தைப்

பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றவள் கண்ணகி என்பதை நாமறியச் செய்துவிட்டார்; கோவலன் திரும்பிய பின், தேவை காரணமாகச் சமூகக் கட்டுப் பாடுகளைப் புறக்கணித்துச் செயலாற்றும் மனவுறுதி உடையவள் என்பதையும் கூறுகின்றார். புகார்க்காண்ட மளவில் இங்ஙனமெல்லாம் காட்சியளிக்கும் கண்ணகி, அக்காண்டம் முழுவதும் நான்கே சந்தர்ப்பங்களில் பேசுகிறாள். அவற்றுள் ஒரு முறை அவள் பேசிய பேச்சே நீண்ட வொன்றாக அமைந்துவிட்டது. மற்ற மூன்றும் இரண்டு சொற்களும் மூன்று சொற்களுமாக அமைந்துள்ளன.

கோவலன் பிரிவால் கண்ணகி துயருற்று வருந்துகிறாள் என்பதை அறிந்த அவள் தோழி தேவந்தி, அவள் நல்வாழ்வு பெறுதல் வேண்டுமென இறைவனை வழிபட்டு மீண்டாள்; மீண்டவள் கண்ணகியின் துயரக் குறிப்பைக் கண்டாள்; அவளது துயரத்தைப் போக்க எண்ணி, “உன் கணவனை நீ விரைவில் பெறுவாய்” என்றாள். அதைக்கேட்ட கண்ணகி அவளை நோக்கி, “என் அருமைத் தோழியே, நீ சொன்ன சொல் பலிக்குமாயினும் என்னுடைய நெஞ்சில் அச்சம் தோன்றுகிறது. ஏனென்றால் நேற்றிரவு நானொரு கனவு கண்டேன்” என்று கூறினாள். அத்துடன் நில்லாது தான் கண்ட கனவையும் அவளுக்குக் கூறத் தொடங்கினாள்.

கனவு உடலைப் பொறுத்தும், உள்ளத்தைப் பொறுத்தும், சூழலைப் பொறுத்தும் ஏற்படும் என்பர். அளவிறந்து உண்பதாலும், மனச்சோர்வு, கலக்கம் போன்றவற்றாலும் தாக்குறும் மனிதனுடைய எண்ணங்கள், கட்டுப்பாடற்ற நிலையில் அவன்

உறங்குகையில், எழுச்சி பெறுகின்றன. அதனையே நாம் 'கனவு' என்கிறோம்.

உள்ளத்தின் எதிரொலிதான் கனவு. அஃதாவது, நாம் எதை எண்ணுகிறோமோ அதுவே கனவாகிறது. இதையே "நனவே கனவு" என்றுங் கூறுவர். சில வேளைகளில் சிறிதே நினைத்த செய்திகளும் நிகழ்ச்சிகளும் கனவில் வருவதைக் காண்கிறோம். தொடர்பில்லா நிலையிலும் சில வேளைகளில் கனக்கள் வருவதுண்டு.

இனி, கண்ணகி தான் கண்ட, அச்சந் தரத்தக்க கனவைத் தேவந்திக்குக் கூறுவதைக் காணலாம் :

"என் கணவர் என்கையைப் பற்றிச் செல்ல, நாங்கள் எங்கோ ஒரு பெரிய நகரத்துக்குப் போய்ச் சேர்ந்தோம். அந்த ஊரில் 'அடாப் பழி' ஒன்று எங்கள்மேல் சுமத்தப்பட்டது. அதனால் கணவற்குத் தீங்கு ஏற்பட்டதெனக் கேட்டு யான் அரசன் அவை சென்று முறையிட்டேன். பின்னர் அரசனுக்கும் அந்த ஊருக்கும் கேடு சூழ்ந்தது. அதை உன்னிடம் சொல்லப் போவதில்லை. சொல்வதைக் குற்றம் என்று கருதுகிறேன். பிறகு நானும் என் கணவரும் அடைந்த நல்வாழ்வை நீ கேட்டால் நகைப்பாய்."

(கனாத்திறமுரைத்த காதை, வரி 45-54)

கண்ணகி இங்ஙனம் அச்சம் தரத்தக்க கனவை ஏன் கண்டாள் என்பதை இனிக் காண்போம் : கண்ணகி மணந்துகொண்ட சில ஆண்டுகளில் கணவனைப் பிரிந்தவள்; செல்வக் குடும்பத்தினள்; சிறுவயதினள்; செல்வமெல்லாம் மாதவிக்குக் கோவலனால் தரப் படுவதை உணர்ந்தவள்; அவள் உள்ளம் அவளையும் அறியா நிலையில் கணவனது குறை பற்றியும், செல்வம் அழிவது பற்றியும், எண்ணிக் கலங்கியிருக்கக் கூடும்.

எண்ணமும் கலக்கமும் அவளிடம் பலமுறை தோன்றி மறைந்திருத்தல் வேண்டும். 'எத்துணை நாட்கள் தாம் இப்படித் தனியாக வாழ்வது? பொருள் எல்லாம் இழந்த பின்னர்க் கணவர் வந்தேதீருவார். எவ்வாறேனும் பொருளீட்டிப் பின்னரேனும் வளமாக வாழலாம்' என்று அந்தப் பெண் உள்ளம் எண்ணி ஏங்கி இருக்கும். பலநாள் ஏக்கம் ஒருநாள் கனவாக உருக்கொண்டது. கணவனைப் பிரிந்த பெண், அவன் வரவை விரும்புவதும், வந்தால் எந்த முறையிலாவது வாழலாம் என்று எண்ணுவதும் இயல்பே. 'நின் காற்சிலம்பை முதலாகக்கொண்டு வாணிகம் தொடங்குவோம். இன்றிரவே மதுரை புறப்பட வேண்டும்' என்று சொன்ன கோவலனிடம், 'நாளை சென்றால் என்ன' என்றும், 'மற்றவரறியாது செல்ல வேண்டுவது ஏன்?' என்றும் கேளாது, 'எழுக', என எழுந்தாள். இதனால், எப்படியேனும் இனி, அவனுடன் வாழ்தல் வேண்டும் என்ற அவள் உள்ளம் தெரிய வருகிறது. கண்ணகி இக் கனவைக் கண்டது அவளது எண்ணத்தின் விளைவுதான் என்று கூறலாம்.

கண்ணகி புகார்க்காண்டத்தில் பேசும் பெரும் பகுதி இதுவேயாகும். கண்ணகியின் கனவை அவளே கூறக்கேட்ட தேவந்தி, அவள் கொண்ட அச்சத்தை எண்ணினாள்; அவளுடைய கலக்கத்தைப் போக்க எண்ணியவள், "பொற்றொடி! உன் கணவன் உன்னை வெறுத்தான் என்று எண்ணாதே. முற்பிறப்பில் நீ ஒரு நோன்பு செய்யத் தவறியதால், இப்பிறவியில் உனக்கு இத்துன்பம் நேரிட்டது. இத்துன்பத்தைப் போக்கிக் கொள்ளக்கூடும் வழி ஒன்று யான் கூறுவேன், கேள்: காவிரி கடலொடு சேரும் கடல் முகப்பில்

அழகிய நெய்தல் சோலையில் சோமகுண்டம், சூரிய குண்டம் என்னும் இரண்டு பொய்கைகள் உண்டு. அவற்றில் நீராடி அருகேயுள்ள காமதேவன் கோயிலில் தொழுதவர் தமது கணவரோடு இவ்வுலகில் இன்ப மடைந்து மறுபிறவியில் போக பூமியில் பிறப்பார்கள். நாம் இருவரும் அப்பொய்கைகளில் படிந்து ஒரு நாள் முழுகுவோம்,'' என்றாள்.

தேவந்தி இவ்வாறு தான் கொண்ட துயர் போக்கிக் கொள்ளக் கூறிய யோசனையைக் கேட்ட கண்ணகி அவ்வாறு செய்ய மறுத்துவிட்டாள். தேவந்தியின் கூற்றை மறுத்து விடக் கண்ணகி நெடிது பேச வில்லை. பலசொற்கள் கூறித் தேவந்தியின் கூற்றை மறுக்கவேண்டும் என்று அவள் நினைக்கவில்லை. சில சொல் கூறித் தம் கருத்தைக் கேட்பவர்க்கு விளங்கச் செய்யும் ஆற்றல் அற்றவர்கள் தாமே பல சொல் கூறக் காமுறுவர்? இக் கருத்தை,

"பலசொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்''

என்ற மறைமொழி வலியுறுத்துவதைக் காண்க. இதுப்பற்றிப் போலும் கண்ணகி, தேவந்தியின் நீண்ட அந்த ஆறுதலுரைக்குப் "**பீடன்று**'' (வரி 64) என்று கூறி அமைந்தாள்! இதனை ஆசிரியர் "**பீடன்றென விருந்தாள்**'' என்று கூறுகின்றார். கண்ணகி **இரண்டாம் முறையாகப்** பேசுவது 'பீடு அன்று' என்னும் இந்த இரு சொற்களேயாகும்.

அவள் மூன்றாம் முறையாகப் பேசுவதை அடுத்துக் காண்போம்:

தேவந்தியின் ஆறுதலுரையைக் கேட்டவள், அவள் சொன்ன முறைகளை மேற்கொள்ள விரும்பாத

வளாய்ப் 'பீடு அன்று' என்று கூறியமைந்த பின்பு, அவளுக்குக் கோவலன் வந்தமை கூறப்படுகிறது. கோவலன் வருகை எண்ணி எண்ணி மிகுந்த எண்ணத்தின் ஆற்றலால் அமைந்த கனவைப் பற்றித் தோழியிடம் கூறியதும், கோவலன் வரவு அவளுக்கு உணர்த்தப்பட்டது. கோவலன் அவளது வாடிய மேனியைக் கண்டு வருத்தப்பட்டான். பின்னர் அவன்,

"சலம்புணர்க் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைத்த
இலம்பாடு நாணுத் தரும்எனக்கு"

—(கனாத்திறம், 69-71)

என்றான். அது கேட்ட கண்ணகி நகை முகத்துடன் **'சிலம்புள கொண்ம்'** என்றாள்.

"நலங்கேழ் முறுவல் நகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மெ‌ன..." —(கனாத்திறம், 73-74)

இப்பொழுது கண்ணகி 'சிலம்பு உள கொண்ம்' என்று கணவனிடம் மூன்று சொற்களே பேசுகின்றாள்.

இதற்குப் பின்னர் அவள், மதுரை மூதூர் நோக்கி நடந்து செல்கையில், மிகவும் வருந்திய நிலையில், **'மதுரை மூதூர் யாது?'** எனக் கோவலனை வினவுகின்றாள்.

"முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
**மதுரை மூதூர் யாதென** வினவ"

இம்முறை கண்ணகி 'மதுரை மூதூர் யாது?' என்ற மூன்று சொற்கள் அளவில் தன்னுடைய பேச்சை நிறுத்திக் கொள்கிறாள்.

இவ்வாறு கண்ணகி நான்கு முறை பேசியவற்றுள் தான் கண்ட கனவின் வரலாற்றைத் தேவந்திக்குக் கூறிய பகுதியும், தன் கணவனை மதுரைக்கு

எவ்வளவு தொலைவு என்று கேட்டதும் அவளது குணப் பண்பாட்டினை விளக்குவன அல்ல. கனவைப் பற்றி அவள் கூறிய பகுதி அவள் விழைவைத்தான் காட்டுகிறது. வழித் துயரத்தின் எதிரொலியாகவே 'மதுரை மூதூர் யாது?' என்ற கேள்வி எழுகிறது. ஆனால் அவள் கணவனைப் பெறுவதற்குத் தேவந்தி கூறிய முறையைக் கொள்ளாது, **'பீடு அன்று'** என்று கூறிய இரு சொற்களும், மாதவி பற்றி இழித்துக் கூறி, முன்னோர் பொருள் தொலைத்தமைக்கு நாணம் தெரிவித்து நின்ற கணவனிடம் **'சிலம்பு உள கொள்ம்'** என்ற மூன்று சொற்கள் மட்டுமே அவளுடைய குணப் பண்பாட்டினை அறிவிப்பனவாய் உள்ளன.

கற்புடைய மகளிர் தெய்வந் தொழுதல் பண்டைக் காலத்து மரபற்ற ஒன்றாகும். கணவன் விரும்பினால் அவனுடன் தெய்வந் தொழலில் மகளிர் பங்கு கொள்ளல் உண்டு.

அக் காலத்து மகளிர் கணவனைவிடச் சிறப்பும் பீடும் வேறு எவர்க்கும் எந்தக் கடவுளர்க்கும் தராது வாழ்வதே கற்புடைய வாழ்வாகும் என எண்ணினர் போலும்! அந்த எண்ணம் பண்பாடாகவே அமைந்து விட்டது. அதனால்தான் கண்ணகி, பொய்கையில் நீராடிக் காமனை வழிபட்டால் கணவனைப் பெற்று இன்புறலாம் என்று கூறிய தேவந்தியின் கருத்தை ஏற்காமல், 'நமக்குத் தகாது' என்று கூறினாள்.

கற்புடைய மகளிர் கணவனை விடச் சிறப்பும் பீடும் வேறு எவர்க்கும் எந்தக் கடவுளுக்கும் தராது வாழ்வதே கற்புடைய வாழ்வாகும் என எண்ணினார் என்பது பண்பாடாக அமைந்து விட்டதென்றால், கண்ணகியின் தோழியான தேவந்தி மட்டும் அந்தப் பண்

பாட்டை மறந்தவள் போல் அல்லது புறக்கணித்தவள் போல் பொய்கையில் நீராடிக் காமனை வழிபடுவதில் நம்பிக்கை கொண்டதும், கண்ணகியை அவ்வாறு செய்து பயனடையுமாறு அழைத்ததும் ஏன் என்ற வினு எழுதல் இயல்பு.

கணவனை அன்றிப் பிறர் எவரையும், எந்தத் தெய்வத்தையும் வழி படாத நிலையே பீடு மிக்கதாகும் என்ற கொள்கை, கண்ணகி காலத்துக்கு முன்னதாகவே ஓரளவு மாறுபட்டிருத்தல் வேண்டும். ஒரு சிலர் அந்தக் கொள்கையைக் கைவிட்டுத் தெய்வங்கள் தொழும் வழக்கத்தை மேற்கொண்டும் அதனுல் பெறும் பயனை நம்பியும் வாழ்ந்திருக்க வேண்டும். அதனுல் தான் தேவந்தி சாத்தனை வழி பட்டாள் ; காமனை வழி பட விரும்பினுள். ஆனுல் கண்ணகியோ 'கணவனே எல்லாம்' என்ற கொள்கையினள் ஆதலின், தேவந்தி கூறியதுபோலச் செய்ய மறுத்து, அம்முறை "நமக்கு ஒவ்வாது" என்று கூறினுள். இக் கூற்றுக் கண்ணகியின் கற்பென்னும் திண்மை நிலையை விளக்கப் போதியதாகும்.

கண்ணகியின் குண நலனை விளக்கக்கூடிய அவள் பேசிய மற்ருெரு பேச்சைக் காண்போம் :

கனவைக்கேட்ட தேவந்தி, காமனை வழிபடச் சொன்னதற்கு மறுப்புத் தந்து துயரம் கொண்ட நிலையில் கண்ணகி இருக்கும் பொழுதுதான் கோவலன் வந்தான் என்பதையும், வந்தவன் கண்ணகியின் வாடிய மேனி கண்டு வருத்த முற்ருன் என்பதையும், பின்னர்ச் "சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக் குலந்தரு வான்பொருள் தொலைத்த இலம்பாடு நாணுத்தரும் எனக்கு" என்று கூறினுன் என்பதையும் கண்டோம்.

கண்ணகியிடம் சற்று முன்னர் நாம் கண்ட துயரம் அச்சம் ஆகிய எவற்றையும் இப்பொழுது காணமுடிய வில்லை. அவள் முறுவல் கொண்டாள் என்று ஆசிரியர் கூறுகிறார்.

பொருளை யெல்லாம் தொலைத்துவிட்டமைக்கு வருத்தம் கூறி அச்செய்கை தனக்கு நாணத்தை அளிக் கின்றது என்று கணவன் கூறியதைக் கேட்டவள் முறு வல் கொள்ளக் காரணமென்ன ?

கண்ட கனவை நினைவிலிருத்திக் கணவன் திருந்தித் தன்னிடம் வந்துவிட்டான் என்ற மகிழ்ச்சியால் அவள் முறுவல் கொண்டாளா? அல்லது பொருளில் லாது வாடும் கோவலனின் வாட்டத்தைத் தீர்க்கத் தன்னால் முடியும் என்ற பெருமித உணர்ச்சியால் அவள் முறுவல் கொண்டாளா? கண்ணகி முறுவல் நகைமுகம் காட்டியது ஏன் என்ற ஐயம் நமக்கு ஏற் படுதல் இயல்பே.

கோவலன் மாதவியுடன் கடற்கரையில் கானல் வரிப் பாட்டுப் பாடியதையும், கோவலன் பாடலில் ஐயங் கொண்டு மாதவி பாடியதையும், அதனால் வெறுப் புற்று 'மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள்' என எண்ணி மாதவியை விட்டு அவன் பிரிந்ததையும் கண்ணகி அறியாள். எனவே, கணவன் திருந்தித் தன்னிடம் வந்துள்ளான் என்ற மகிழ்ச்சியால் முறு வல் கொண்டாள் எனக் கொள்வது பொருந்தாது. அங் ஙனம் கணவன் திருந்தித் தன்னிடம் வந்துள்ளான் என அவள் எண்ணியிருந்தாள் என்று கொண்டால், திருந்தி வந்த கணவனை மகிழ்வுரை கூறியல்லவா அவள் வர வேற்றிருக்க வேண்டும். மகிழ்ச்சி உரை கூறி அவனை வரவேற்காவிடினும், தன் துயர் கூறி அவன் வருந்திய

பொழுதேனும் ஆறுதல் கூறி வருங்கால வாழ்க்கையை வளமாக அமைத்துக் கொள்ளலாம் என்றேனும் கூறி யிருக்கலாம். இரண்டையும் அவள் செய்யவில்லை; மாறாக நகை முகங்காட்டி ‘ சிலம்புள, கொண்ம் ’ என் கிறாள்.

கோவலன் கூறியதை யெல்லாம் கேட்ட அவள் நகைமுகங் கொண்டு, ‘சிலம்புள, கொள்க’ என்று கூறு வதை நோக்க, அவன் துயரைத் தன்னால் தவிர்க்கக் கூடும் என்ற பெருமித உணர்வே அவளது நகைமுகத் திற்குக் காரணமாயிற்று என்று கூறலாம். கோவலன் மாதவியுடன் மாறுபட்டதை யறியாத கண்ணகி, பணம் பெற்று மீண்டும் மாதவியிடம் செல்லவே கோவலன் வந்துள்ளதாக எண்ணியிருக்க வேண்டும். பண மில்லாக்குறை கோவலனை வருத்தியிருக்கக் கூடும் என்றும், அதனாலேயே அவன் பொருள் பெற்றேகத் தன்னை யடைந்தான் என்றும் எண்ணியவள், கணவன் துயர் போக்க வாய்ப்பொன்று கிடைத்ததே என, எண்ணி மகிழ்ந்தாள்—நகைமுகங் கொண்டாள் எனக் கொள்வது பொருந்துவதாக அமைகிறது. கண வன் தேவையைத் தன்னால் நிறைவு செய்ய முடியும் என்ற மகிழ்ச்சியால் அவள் முறுவல் கொண்டாள் எனின், அம்முறுவல் உண்மையானதா என்பதை நாமறிதல் வேண்டும்.

கோவலன் கூறியதையும் கண்ணகி தந்த பதிலை யும் நோக்க, நம்மால் ஒருண்மை அறிய முடிகிறது. கோவலன் மாதவியுடன் வாழ்ந்த காலத்தில் அவ்வப் போது வந்து கண்ணகியிடம் பொருள் பெற்றுச் சென்றிருத்தல் வேண்டும் என்பதே அவ்வுண்மை யாகும். பொருள் பெறுவான் வேண்டிக் கண்ணகி

யிடம் வந்தவன் அவளை முதலில் பாராட்டிப் பொருள் பெற்றுப் பின்னர் மாதவியை நாடுதலையே வழக்கமாகக் கொண்டிருத்தல் வேண்டும் என்பதும் இதனுல் தெரிகிறது. அதனுல்தான் கோவலன் மாதவியைப் பழித்துக் கூறியபோதும் அவள் ஒன்றும் பேசாது 'சிலம்புள்ளது, கொள்ளுங்கள்' என்று கூறுகிருள்.

கண்ணகியின் முறுவல் துயரச் சாயலுடன் கூடியதாகவே உள்ளது. சிலம்புகளைக் கொண்டவுடன் கோவலன் மாதவி மனைக்குச் சென்று விடுவான் என்றே அவள் எண்ணினுள். கண்ணகியும் 'பெண்' என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அதனுற்ருன் கோவலன் நடிப்பைச் சொல்லாமல், சொல்லி வெறுக்காமல், முறுவல் மூலம் தன் மனத்துயரைப் புலப்படுத்தினுள் என்று கொண்டால்தான் காவியத் தலைவியை உள்ளவாறு மதிப்பிட்டவராவோம்.

கோவலன் பலமுறை மாதவிக்காகக் கண்ணகியிடம் பொருள் பெற்றுச் சென்றுள்ளான் என்று நாம் நினைக்க ஆசிரியரின் வாய்மொழியும் துணை புரிகின்றது.

"..........இச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனேடு
உலந்த பொருளீட்டுத லுற்றேன்......"

—(கனத்திறம், வரி 74-75)

இங்கு, கோவலன், "இச்சிலம்பை முதலாகக் கொண்டு" என்று கூறுவதைக் காண வேண்டும்: " இச்சிலம்பை முதலாகக் கொண்டு இழந்த பொருள்களை மீட்டும் பெறுவேன்" என்று கூறுகிருன். எனவே, கோவலனிடம் கண்ணகி பேசிய மூன்று வார்த்தைகள் கொண்ட அந்தப் பேச்சு, அவளது உள்ளத்தைத் தெளிவுறக் காட்டுகின்றது.

இனி, இப் பேச்சால் கண்ணகியின் உயர்ந்த மனத்தையும் அறியலாம். தன்னிடம் உள்ள பொருள்களை வாங்கிச் சென்று மாற்றாளிடம் தருவதைக் கண்டு கொண்டிருக்கும் எந்த மனைவியும், கணவனை வெறுத்து ஒதுங்கி வாழ எண்ணியிருப்பாள்; அல்லது சமுதாயத்துக்கு அஞ்சி, வெளியார்க்கு உறவு கொண்டவர்கள் போல் நடித்துப் பகை யுணர்ச்சியுடன் வாழ்க்கை நடத்துவாள். மாற்றாளுக்குப் பொருள் தரவேண்டும் எனத் தன்னிடமே' கேட்டு வாங்கிச் செல்லும் கணவனுக்கு எந்தப் பெண்ணும் இந்த அளவில் அமைதியாக நன்முறையில் மதிப்பளிக்க மாட்டாள் என்பது தெளிவு. ஆனால் கண்ணகியோ கணவனது நடிப்பை எல்லாம் அறிந்திருந்தும், தன் துயர் காணாத் தகை சால் பூங்கொடியாய், "சிலம்புள, கொள்க" என்று கூறுகிறாள். 'கொண்டு செல்லுக' என்றும் அவள் கூறாதது கவனிக்கத்தக்கது. இது கண்ணகியின் பேச்சுத் திறனைக் காட்டுகிறதன்றோ?

## 3. மதுரையில் கண்ணகி-I

சிலப்பதிகாரத்தில் கண்ணகி மூன்று நிகழ்ச்சிகள் காரணமாகத் துன்பமடைகிருள். கணவன் அவளை விட்டுப் பிரிந்ததுதான் கண்ணகி வாழ்வில் அவலம் கால் கொண்ட முதல் நிகழ்ச்சி. கணவன் மனைவியைப் பிரிதல் என்பது துயர்தரும் ஒன்றுதான் என்ருலும், இந்நிழ்ச்சி புதுமையானதன்று. ஆயினும் மணம் நடந்தேறிய சில ஆண்டுகளுள்,

> "மாசறு பொன்னே வலம்புரி முத்தே
> காசறு விரையே கரும்பே தேனே"

என்றெல்லாம் பாராட்டிப் பேசிய கணவன் தன்னை விட்டுப் பிரிந்தது கண்ணகிக்கு உண்மையில் துயரம் தந்திருக்க வேண்டும். பிரிந்த கணவன் பொருள் வேண்டியோ புகழ்வேண்டியோ பிரிந்திருந்தாலும் அவள் துயரம் கொண்டிராள். நாமும் அவள் வாழ்வில் அவலம் கால் கொள்ளத் தொடங்கிவிட்டது என்று நினைக்க வேண்டி வந்திராது. கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிந்தது காம இன்பம் கருதியே என்பதை எண்ணும் போதும், அதனுலேயே அவன் மாதவியின் உறவு பெற்ருன் என்பதை நினைக்கும் போதும் கண்ணகிபால் நமக்கு இரக்கம் உண்டாகின்றது. இந்நிகழ்ச்சி கண்ணகிக்கு எல்லையற்ற துன்பத்தைப் பயக்கக் கூடியது என்பதில் எட்டுணையும் ஐயம் இருத்தற்கில்லை.

கோவலன் பாராட்டிய புகழுரைகளை யெல்லாம் கேட்ட கண்ணகி, இன்பம் வேண்டி அவன் தன்னை விட்டுப் பிரிந்து ஒருத்தியை நாடி தன்னை மறந்து வாழ்வான் என்று அவள் எவ்வாறு எண்ணியிருக்க முடியும்? ஆகவே, எதிர்பாராத இப்பிரிவினால் கண் ணகி பெரிதும் தாக்கப்பட்டிருக்கக் கூடும் என்று கொள்ளலாம்.

கோவலன் பிரிந்த பிறகு, அவன் பிரிவுக் காலத் தில் கணவன் நினைவுடனேயே வாழ்ந்து வந்த அவ ளது வாழ்வில் அவலம் மீண்டும் தன் பணியைத் தொடங்கியது. கனாக் கண்டாள். கண்ட கனவின்படி கணவன் பழி சுமத்தப்பட்டு இறந்து விடுகிறான். கண் ணகியின் உள்ளம் அந்தக் கனவை எண்ணி யெண்ணிக் கலங்கியிருத்தல் வேண்டும். கோவலன் வந்ததும் அவன் சொற்படி நடந்து அவனுடன் இன்பமுற வாழ வேண்டும் என்று அவள் எண்ணியிருத்தல் வேண்டும். அதன் விளைவுதான் "மதுரை மூதூர் போவோம், எழுக" என்றதும், மறுமொழி கூறாது அவனை உடன் செல்லத் தூண்டியிருத்தல் வேண்டும்.

கோவலன் பாண்டியனது நிலைதவறிய ஆணையால் கள்வன் என்ற குற்றம் சாட்டப்பட்டுக் கொல்லப்பட் டது கண்ணகிக்குத் துயரம் தந்த **மூன்றாம் நிகழ்ச்சி** யாகும். "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்லை" என்பதல்லவா நம்நாட்டுப் பழமொழி. ஆகவே, கணவன் இறந்தது கண்ணகிக்கு ஆறாத்துயர் அளித்து விட்டது. பலதுயரங்களை நகை முகங்காட்டியவாறே பொறுத்துக் கொண்ட கண்ணகி, கணவனைக் கொன்ற அரசனையும் அவன் அநீதிக்கு ஆக்கமளித்து வாழும் நாட்டையும் அழிக்கச் சூளுரைத்ததையும் இந்தப்

பெருங்குறை பற்றியே யாகும் என்று கொள்வது தவருகாது.

இம்மூன்று நிகழ்ச்சிகளுள் இரண்டு நிகழ்ச்சிகள் புகார்க் காண்டத்திலேயே முடிந்துவிட்டன. கோவலன் பிரிந்ததும் கண்ணகி கனுக் கண்டதும் பற்றிய விளக்கங்களை நாம் முன்னரே கண்டோம்.

இனி மதுரைக் காண்டம் காட்டும் வழியிற் சென்று இளங்கோவடிகளின் கண்ணகியைக் காண்போம் :

இக்காண்டத்தில் கண்ணகி சினம் கொண்டவள், வஞ்சினம் கூற வல்லவள், எண்ணியதைச் செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவள் என்பதைப் பல நிகழ்ச்சிகள் வாயிலாக ஆசிரியர் விளக்குகிருர். புகார்க் காண்டத்தில் அழகு, கற்பு என்ற பொதுப் பண்புகளை மட்டுமே கூறி, பொறுத்தற்கரிய துயரையும் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றவள் என்பதையும் கூறிய ஆசிரியர், நம் உள்ளத்தில் கண்ணகி பற்றிய நல்லதோர் எண்ணத்தை உருவாக்கவேண்டுமென்று எண்ணி, கோவலன் திரும்பியபின் கண்ணகியின் நிலை பற்றிக் கூறுகையில், சமூகக் கட்டுப்பாடுகளைத் தக்க காரணங்களால் புறக்கணிக்கவும் துணிவு கொண்டவள் என்பதையும் கூறுவதைச் சென்ற பகுதியில் அறிந்தோம்.

மதுரைக் காண்டத்தில் கண்ணகி சில சந்தர்ப்பங்களிற்ருன் பேசுகின்ருள். இப்பகுதியில் கண்ணகியைப் பற்றிப் பிறர் பேசுவதும் அதிகமாயில்லை. ஆயினும் கண்ணகி நம் மனத்தைவிட்டு அகலா நிலையில் உருக் கொள்ளுகிருள். இப்பகுதிகளில் கண்ணகியின் கற்பின் திறமும் பிறர் நலம் பேணலும் தளரா மன வுறுதியும் புலனுவதுடன், அவள் மனித நிலையிலிருந்து தெய்வ

நிலைக்கு உயர்ந்த மாண்பும் தெரிகின்றது. கண்ணகியின் பேச்சின் சிறப்பும், அவளைப் பற்றிப் பிறர் பேசுவனவு மாகிய பகுதிகள் சுவை பயப்பனவாய் உள்ளன. கண்ணகியைப் பற்றிய பிறர் கூற்றுக்களைக்கொண்டு அவளது பண்பு நிலையை இங்குக் காண்போம்.

கற்புடைய பெண்டிர் கணவனன்றிப் பிற தெய்வங்களைத் தொழார் என்று எண்ணிய கண்ணகி, கற்புத் திண்மை கொண்டவளாக விளங்கினள். கற்புத் திண்மை கொண்ட அவளுடைய உடலும் உள்ளமும் மென்மையானவையாக அமைந்தன. கோவலன் அவளை **'நறுமலர் மேனியாள்'** என்று கூறுவதும், கவுந்தியடிகள் **'வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்'** என்று கண்ணகியைப் பற்றி மாதரியிடம் கூறுவதும் கண்ணகியின் உடல் மென்மை மிக்கது என்பதை வலியுறுத்த வல்லன.

புகாரை விட்டு மதுரை நோக்கி நடந்த கோவலனும் கண்ணகியும் கவுந்தி அடிகளின் துணையுடன் சோலை யொன்றில் தங்கினர். அங்கு வம்பப் பரத்தையொடு வறுமொழியாளன் ஒருவன் வந்து சேர்ந்தான். வந்த இருவரும் அடிகளையும், கோவலன் கண்ணகியையுங் கண்டு, "காமனும் தேவியும் போன்றுள்ள இவர்கள் யாரோ?" என்று கேட்டனர். "இவர்கள் என் மக்கள்" என்று பதிலிறுத்தார் அடிகள். அடிகள் பதில் அவர்களுக்குப் பிடிபடவில்லை. "உடன் பிறந்தவர்கள் கணவன்—மனைவிபோல் வாழ்வது முண்டோ?" என்றனர் அவ் வறுமொழியாளர். அப்போது கண்ணகி உற்ற உணர்வு அவளுடைய உள்ளத்தின் மென்மைத் தன்மையைக் காட்டவல்லது :

" உடன்வயிற் றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்
தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
**காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க''.**

(நாடு காண்காதை, 227-230)

கண்ணகியின் உள்ளம் மென்மைத் தன்மை யுடையது என்பதற்கு மற்றொரு சான்றுங் காண்போம்.

மதுரை செல்லும் வழியில் ஐயை கோவிலில் அவர்கள் மூவரும் தங்கினர். அங்கு வேடர்கள் தெய்வ மேறப் பெற்ற சாலினியின் சொல் கேட்டு நின்றனர். வேட்டுவர்கள் கொற்றவையின் பல புகழையும் கூறிப் பரவி நின்றனர். இம்மூவரும் இவற்றைக் கண்டிருந் தனர். தெய்வமுற்ற சாலினி, கோவிலின் ஒரு மூலே யில் கணவனோடிருந்த கண்ணகியை நோக்கி, "இங்கிருக் கின்ற இவள் கொங்க நாட்டினை ஆளும் செல்வி; குடகு நாட்டினை யாளும் செல்வி; தென் தமிழ் நாட் டினை யாளும் பாவை; இவ்வாறு சிறப்படைவதற்கு இவள் சென்ற பிறவியில் செய்த தவத்தின் முளைத்த கொழுந்து போல்வாள். இவ்வுலகிற்கு முழுமாணிக்கம் போன்று உயர்ச்சி பெற்ற பெண்ணுருக் கொண்ட தோர் திருமணி,'' என்று கூறினாள்.

" இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
தென்றமிழ்ப் பாவை செய்தவக் கொழுந்து
ஒருமா மணியாய் உலகிற்கு ஓங்கிய
திருமா மணி.'' (வேட்டுவ வரி, 47-50)

இதனைச் செவியுற்ற கண்ணகி மிகவும் நாணினாள். "இம்மூதறிவாட்டி தெய்வ மயக்கத்தால் கூறினாள்'' என்று கூறித் தன் கணவனுடைய முதுகின் புறமாக ஒதுங்கிப் புன்முறுவலோடு நின்றாள்.

"...........தெய்வமுற் றுரைப்பப்
பேதுறவு மொழிந்தனள் மூதறி வாட்டிஎன்று
அரும்பெறற் கணவன் பெரும்புறத் தொடுங்கி
விருந்தின் மூரல் அரும்பினள் நிற்ப"

(வேட்டுவ வரி, 50-53)

மதுரைக் காண்டத்தில் கண்ணகியைப் பற்றிப் பிறர் பேசுவது மிகுதியாயில்லை என்பதை முன்னரே கூறினோம். வம்பப்பரத்தையும் வறுமொழியாளனும் கூறியதும் புகார்க்காண்ட நிகழ்ச்சிகளுள் ஒன்றாகவே அமைந்துவிடுகின்றது. தெய்வமுற்ற சாலினி கண்ணகியைப் பற்றி உரைத்ததும், துறவியரான கவுந்தியடிகள் அவளைப் பற்றிக் கூறியதுமே மதுரைக் காண்டத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளன. அவ்விருவர் பாராட்டுரைகளுள் சாலினியின் போற்றுதலைக் கண்ட நாம், இனிக் கவுந்தியடிகளின் போற்றுதலைக் காண்போம்:

துறவு வாழ்க்கை வாழ்ந்துவந்த கவுந்தியடிகள், வழிப்பயணத்தில் சிறிது தொலைவு நடந்து பழகிய அளவிலேயே,

"என் பூங்கோதை"

(நாடு காண்காதை, 231)

என்று கண்ணகியைக் குறிப்பிட்டார். பலநாட்கள் பழகிய பின்பு கவுந்தியடிகளின் மனத்தில் கண்ணகி பற்றிய அன்பு வளர்ந்தது. அத்துடன் கவலையும் வளர்ந்தது. கண்ணகியைத் தீங்கற்ற இடத்தில் ஒப்படைக்க வேண்டுமே என்ற நல்ல எண்ணம்தான் கவலைக்குக் காரணம். அடிகளார், கவலையோடிருந்த போது மாதரியைக் கண்டார். மாதரியின் வாழ்க்கை எளிமையானது என்றும் தூய்மையுடையது என்றும் எண்ணிய அம்மையார், மாதரியிடமே கண்ண

கியை அடைக்கலமாக்குவோம் என்று துணிந்தார். மாதரியை விளித்துக் கண்ணகியை அவளிடம் ஒப் படைக்கும் நிலையில் அம்மையார் கூறுவன கண்ணகி யின் சிறப்பை விளக்குவன. அவற்றைக் காண்போம் :

"உயர் குடியிற் பிறந்த இவளை நின் கையில் அடைக்கலமாகத் தந்தேன். ஆதலால் நீ இம்மங்கல மடந்தையை நன்னீராட்டி, சிவந்த கயல் போலும் நெடிய கண்களில் அஞ்சனம் எழுதி, நறிய மெல்லிய கூந்தலிலே சிலவாகிய மலர்களைப் பெய்து, தூய மடிப்புப் புடைவையை உடுத்தி இவளுக்கு ஆய மகளிரும், செவிலித் தாயரும், நற்றாயும் நீயே யாகத் தாங்குவாயாக".

இங்ஙனம் கண்ணகியைக் காக்க வேண்டும் முறை களை யெல்லாம் கூறும் நிலையில் கவுந்தியடிகள் தாயன் புடன் பேசுவதைக் காண்கிறோம். இனிக் கவுந்தியடிகள் அறநிலையில் நின்று கூறுவன காண்போம் :

"துயருற்று என்னோடு போந்த இளைய கொடி போன்ற இந்நங்கையின் அழகிய சிறிய அடியை மண் மகளும் முன்பு கண்டறியாள் ; இவள் கதிரவன் வெம் மையால் தன் காதலன் மெய்வருந்தினன் என்று நடுங்கு துயரம் கொண்டு, நாப் புலர வாடித் தன் துயர் என வேறு காணாத பெருமை யமைந்த பூங்கொடியை ஒப் பாள். தம் காதலர்க்கு இனிய வாழ்க்கைத் துணையாகிய மாதர்க்கு இன்றியமையாத கற்பை அணியாகப் பூண்டு கொண்ட இத் தெய்வமே யல்லாது வேறு பொலி வுடைய தெய்வத்தை யாம் கண்டிலேம்."

"என்னொடு போந்த இளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு

நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
**தன்துயர் காணுத் தகை சால் பூங்கொடி**
இன்றுணை மகளிர்க்கு இன்றி யமையாக்
**கற்புக் கடம்பூண்ட இத் தெய்வம்** அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்''

(அடைக்கலக்காதை, 137-144)

கவுந்தி அடிகள் என்னும் துறவியார் கண்ணகியைப் பற்றி இவ்வாறு கூறுகின்றார். கண்ணகி துறவியும் போற்றும் பெருமை பெற்று விளங்குவதை இந் நிகழ்ச்சி அறிவிக்கிறதன்றோ?

கண்ணகியைப் பற்றி ஊராரின் கருத்தை இனிக் காண்போம்: கணவன் கள்வன் என்று குற்றம் சாட்டப்பட்டுக் கொல்லப்பட்டான் என்பதைக் கேட்ட அளவில் துடிதுடித்து மன்னன்முன் சென்று வழக்காடி உண்மையை நிலைநிறுத்த வேண்டும் என்ற எண்ணங் கொண்ட கண்ணகியின் சூளுரைகளையும் வருத்தவுரைகளையும் கேட்ட மக்கள், அவளது நிலையைக் கண்டு, ''செம்பொன்னாலாகிய சிலம்பு ஒன்றைக் கையிலேந்தி நம்மைக் கெடுத்தற் பொருட்டுப் புதுமையுடைய பெரிய தெய்வம் ஈண்டு வந்தது. இதனால் இனி யாது விளையுமோ!'' என்றனர்.

''செம்பொற் சிலம்பொன்று கையேந்தி நம்பொருட்டால்
வம்பப் பெருந்தெய்வம் வந்த திதுவென்கொல்!
ஐயரி யுண்கண் அழுதேங்கி அரற்றுவாள்
தெய்வமுற் றுள்போலுந் தகைய ளிதுவென்கொல்!''

(ஊர்சூழ் வரி, 23-27)

ஊரவர் கண்ணகியைக் ''கற்பின் திரு'' என்றே எண்ணினர்; தெய்வமுற்றவள் போலச் சிலம்பைக் கையிலேந்திய கண்ணகியால் பேரழிவு ஏற்படக்கூடும் என்றெண்ணினர் என்று ஆசிரியர் கூறுகின்றார்.

இதுகாறும் மதுரைக் காண்டத்தில் கண்ணகி பற்றிப் பிறர் கூறியதைக் கண்டோம். அவற்ருல் கண்ணகியின் உடல் மென்மை, உள்ள மென்மை ஆகிய தன்மைகளையும் அவள் சினங்கொண்ட நிலையையும் அறிதல் முடிந்தது. இதுவரையும் அன்புச் செல்வியாக விளங்கிய கண்ணகி, சூழ்நிலையின் காரணமாக வன்மையுடையவளாக—மறச் செல்வியாக மாறிவிடுகின்ருள். இதனை அடுத்த பகுதியிற் காண்போம்.

# 4. மதுரையில் கண்ணகி-II

கண்ணகி மாதரி மனையில் கோவலனுக்கு அமுது படைத்தாள். அமுதுண்ட பின் வெற்றிலை தந்த கண்ணகியைக் கோவலன் அழைத்து, "நீ இந் நெடுவழி நடத்தற்கு உரியவள் அல்லையே என எண்ணி என் பெற்றோர் வருந்தியிருப்பார்கள். இருமுதுகுரவர்க்கும் உனக்கும் சிறுமை செய்தேன். இந் நிலையிலும் மதுரையை விட்டு இந்நகர்க்கு வருக என்று நான் சொல்ல, அது முறை அன்று எனக் கூருமல் நீ ஒருப்பட்டு எழுந்தாயே, என்ன செயல் செய்து விட்டாய்?'' (கொலைக்களக் காதை, வரி 57-70) என்று கேட்டு வருந்தினன். கோவலன் கூறியதைக் கேட்ட கண்ணகி பேசத் தொடங்கினுள். இப் பேச்சு இன்றியமையாத ஒன்ருகும். கண்ணகி கணவனைக் கடிந்துரைக்கின்ருள். இதுவரையும் கோவலன் செயலால் மனத்தில் ஒரு வகையான துயர் கொண்டிருந்தவள், கோவலன் மகிழ்ச்சியாக இருந்த நேரத்தில், அவன் கேட்ட வினவுக்கு விடை கூறும் வகையில் அவனது செயலைக் கடிந்து கூறலானுள்.

கோவலன் தனக்குச் செய்த தீங்கைக் கண்ணகி தீங்காகவே எண்ணவில்லை. அதைப் பற்றி அவள் தேவந்தியிடமும் ஏதும் கூறவில்லை. கோவலன் தனக்குச் செய்த தீங்கை நினையாத அவள், கோவல

னது செயலால், அவன் பெற்ரூேர் உள்ளம் நொந்து வருந்தியதை மட்டும் மறக்கவில்லை. மாமன் மாமியின் துயர் கண்டு வருந்திய அவள், அவர்கள் துயரப்படு கின்ரூர்களே என்ற எண்ணத்தால் கோவலன் செயலைக் கண்டிக்க—இடித்துரைக்க எண்ணிஞள். மாதரி மனையில் அவளுடைய எண்ணம் செயல் பெற்றது. "எழுகென எழுந்தாய் என் செய்தனை ?" என்று கேட்டான் கோவலன். அச்சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு, கண்ணகி நெடுநாட்களாகத் தன் உள்ளத்தே வெளியிடாது அடக்கி வைத்திருந்த துயரை வெளியிட்டாள். அவள் கூறிய மாற்றம் அவளுடைய பண்பு நலன்களை விளக்கப் போதிய சான்ருகும்.

"அறவோர், துறவோர், விருந்தினர் முதலானவர் கட்கு அளித்தல் போன்றவற்றை இழந்த என்னை, நும் பெற்ரூேர் கண்டு வருந்தினர். நீர் என்னுடன் இல்லாமையால் வந்த வெறுப்பை மறைத்து நான் வாழ்ந்தேன் என்ருலும், அவர்கள் அதனைக் கண்டுகொண்டு அன்புடன் அருள் கலந்த மொழியால் என் பொறுமையைப் பாராட்டினர். என் உள்ளத்தே மறைத்த உடல் வருத்தமும் மனத் துயரமும் வெளிப்பட்டு வாய் திறந்து சொல்வது போல் இருந்தது என் பொய்ம் முறுவல் என்று அவர்கள் அறிந்து வருந்தும் அளவில் தகாத ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்தீர். நான் உம்முடைய வார்த்தைக்குச் சிறிதும் வேறுபாடு கூருதவள் ஆதலின், நீர் கூறியதற்கு உடன்பட்டு எழுந்தேன்," என்ருள் கண்ணகி.

இதுகாறும் கண்ணகி கோவலனைக் கடிந்துரைக்க வில்லை. மாமனும் மாமியும் தன்னைக் கண்டு வருந்துவதைக்கண்டு, உளம் வருந்திய கண்ணகி, அவர்களை அவ்

வாறு வருந்துமாறு செய்த தன் கணவனைக் கண்டிக்க வேண்டும் என்று எண்ணியிருக்கக் கூடும். ஆனுல் அவளுக்கு அதற்கான வாய்ப்புகள் ஏற்படவில்லை. தான் கண்ட கனவினைத் தேவந்தியிடம் கூறிய பின்பு கோவலன் வந்ததை அறிந்து அவனைக்கண்டு நின்றவள், தான் கண்டிக்க எண்ணிய எண்ணத்திற்குச் செயல் உருத் தந்திருக்கலாம். ஆனுல் கோவலன் முகத்தில் படர்ந்திருந்த துயரநிலை அவளை அவ்வாறு செய்யவொட்டாது தடுத்தது. மதுரைக்குச் சென்று மாதரி வீட்டில் உணவுண்டு கோவலன் துயர் தீர்ந்து இனிது இருக்கும் வாய்ப்பு நேர்ந்தபோதுதான் அவள் அவனைக் கடிந்துரைத்தாள். கோவலன் உணவுண்டு உள்ள அமைதியுடன் இருந்தான். இந்த வாய்ப்பினையே கண்ணகி, பயன்படுத்திக்கொண்டு, "பெற்ருேர் உள்ளகம் வருந்துமாறு தகாத ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்தீர்," என்று இடித்துரைத்தாள். கோவலனது குறையைக் கூறியவள், தன்னைப் பற்றிக் கூறுகையில் அறச்செயல்கள் செய்ய முடியாது போயிற்றே என எண்ணி வருந்தியதாகவும் குறிப்பிட்டாள். தான் என்றும் மாருத வாழ்க்கையுடன் ஒரு நிலையாய் வாழ்ந்த தன்மையையும் அவள் கூறினுள். அவ்வாறு ("யாவதும் மாற்ரு உள்ள வாழ்க்கையேன்") தன்னைப் பற்றிக் கூறிய கண்ணகி, கோவலனுடைய உறுதியற்ற—நிலையற்ற வாழ்வைச் சுட்டிக் காட்டினுள் என்றும் கொள்ளலாம். ஆனுல் அவள் அவன்மேல் குற்றம் கூறும் முறையில் ஒரு சொல்லும் கூருதது கவனித்தற்குரியது.

கோவலன் பெற்ருேர்க்குச் செய்த துன்பத்தை மட்டுமே எடுத்துக் கூறிக் கண்ணகி கடிந்துரைத்தாள். அதனுலேயே அவள், "போற்ரு ஒழுக்கம் புரிந்தீர்"

என்று கூறினள். அறவோர்க்கு அளித்தல் முதலிய அறங்களைச் செய்யாது வறிதே வாழ நேர்ந்ததைத் தவிர வேறு கவலை இல்லை என்றும், கோவலன் விருப்பப்படி ஒழுகுதலே தனக்கு இன்பம் தருவதாகும் என்றும் கூறும் கண்ணகி, தன் இளமை வறிதே கழிந்ததை எண்ணித் தான் வருந்தியதில்லை என்பதையும் புலப்படச் செய்கின்றாள். இதனால் கண்ணகி, "தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி" யாக விளங்கும் தன்மை புலனாகின்றது. "இனியேனும் மகிழ்ச்சியாக வாழலாம்; நடந்தன நடந்தன; நடப்பன நல்லனவாக இருக்கட்டும்," என்றெல்லாம் அவள் கூறித் தன் உள்ளத்தைப் புலப்படுத்தவில்லை; மாறாகத் தன் துயரையும் ஆவலையும் மறைத்து, மிகவும் கடுமையான முறையில், "போற்றா ஒழுக்கம் புரிந்தீர்" என்றாள். இந்த இடித்துரை காலங்கடந்த ஒன்றாயிற்று. உரிய காலத்தில் கண்ணகி இவ்வாறு கூறியிருந்தால், அவளது வாழ்வுப் போக்கே மாறியிருக்கலாம்.

அறவோர்க்கு அளித்தல் முதலிய அறச் செயல்கள் கணவனும் மனைவியும் சேர்ந்து செய்யத் தகுவன. கோவலன் தன்னைவிட்டுப் பிரிவதற்கு முன்பு கண்ணகி இவ்வறச் செயல்களில் ஈடுபட்டிருந்தாள். கோவலன் தன்னைவிட்டுப் பிரிந்திருந்த காரணத்தால் அவள் இவ்வறச் செயல்களைச் செய்ய முடியாமல் தவித்தாள். இத்தவிப்பு அவள் உள்ளத்தை நீண்டகாலமாக வாட்டி வந்தது. அதனாற்றான், "எழுகென எழுந்தாய், என் செய்தாய்!" என்று கேட்ட கோவலனுக்கு, "அறவோர்க்கு அளித்தல் முதலான அறங்களைச் செய்யாது வாழ்ந்த என்னை" என்று தொடங்குகின்றாள்; பின்னரே அவன் தன்னுடன் வாழாததைக் குறிப்பிடுகின்

ளுள். இம்முறையை நோக்க, கண்ணகி தன் துயரைப் பொருட்படுத்தவேயில்லை என்பது புலனாகும். பிறர் நலம் பேணும் பெருந்தன்மை அவளிடம் இருந்தது. கணவன் மகிழ்வே தன் மகிழ்வு என்றும் அவள் எண்ணினாள் ; பொறுமையே உருவாக விளங்கினாள்.

ஆசிரியர் கண்ணகியை வழிபடும் சிறப்புடையவளாகச் செய்யவேண்டும் என்ற எண்ணத்துடனேயே நூலைத் தொடங்கியுள்ளார் என்பது இதனால் நன்கு விளங்கும். தன்னை மணந்த கணவன் தன்னிடமே பொருள் பெற்றுச் சென்று அயலாளுக்கு அளித்து அவளுடன் கூடி மகிழ்வதை எந்தப் பெண்ணும் பொறுக்க மாட்டாள் என்பதும், பொறுத்தாலும் பொருள் தரச் சம்மதியாள் என்பதும், அதற்கும் ஒருப்பட்டாளேனும் கணவனுடன் தனித்திருக்கும் போது தன் உள்ளக் குறையை நன்கு கூறி இனியேனும் தன்னை விட்டுப் பிரியாதிருக்க வேண்டுவாள் என்பதும், இதுவே பெண்ணுக்குள்ள இயல்பு என்பதும் நாமறிவோம். ஆனால் இயல்பான இந்தப் பெண்மை நிலைக்கு மாறாகவே கண்ணகி விளங்குகின்றாள். கண்ணகியை உயர்பண்புகட்கு உறைவிடமாகச் செய்யவே ஆசிரியர் இங்ஙனம் உருவாக்கிச் செல்கின்றார் என்று கூறுவது பொருந்தும்.

"எழுகென எழுந்தாய், என் செய்தனை!" என்பதற்கு அரும்பதவுரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் பொருள் கொள்வதை இனிக் காண்போம் :

" என் செய்தனை என்றது செய்தலருமை என்னென்று வியந்தது "

என்பது அரும்பதவுரை. "நீ என்ன கருமம் செய்தாய் ! எனக் கோவலன் இரங்கிக்கூற," என்பது அடி

யார்க்கு நல்லார் உரை. கண்ணகியின் செயலைக் கோவலன் பாராட்டியதாக அடியார்க்கு நல்லார் கொண்டார். ஆனால் அதுவன்று கோவலன் அவ் வாறு கூறியதன் பொருள். கோவலன் இப்பொழுது மனம் மாறிய நிலையில் காட்சி அளிக்கின்றான். புகாரை விட்டுப் புறப்பட்டதால் கண்ணகிக்கு நேர்ந்த துன்பங் களைக் குறித்து அவன் வருந்தினான். தன் தவறான செயல்களை யெல்லாம் பொறுத்தது மட்டு மல்லாது, தான் அறிவிழந்து கூறியபடி மதுரைக்குப் புறப்பட்டு வருத்தத்தை மேற்கொண்டாளே என்று அவன் கண் ணகியின் நிலைக்கு இரங்கி யிருக்க வேண்டும். அதனாற் றான் ஆழ்ந்த உணர்ச்சியுடன், "எழுகென எழுந்தாய், என் செய்தனை!" என்றான்.

கண்ணகியின் மாற்றம் கேட்ட கோவலன், அவ ளைப் பல படப் பாராட்டிக் காற்சிலம்பைப் பெற்று, அதனை விற்றுவர மதுரை நகர்க்குள் சென்றான்; சென் றவன் பொற்கொல்லனது சூழ்ச்சியால் 'கள்வன்' என்று கூறப்பட்டுக் கொலை செய்யப்பட்டான்.

கோவலன் கண்ணகியை விட்டுச் சென்ற பின்பு அங்கு நடைபெற்ற குரவை யாட்டத்தைக் கண்ணகி கவனித்துக்கொண்டிருந்தாள். குரவை முடிவில் மாதரி வையையில் நீராடச் சென்றாள். அப்பொழுது கடைத்தெருவிலிருந்து வந்த ஒருத்தி, கோவலனைச் சிலம்பு திருடியவன் என்று அரசன் ஏவலாளர் கொலை செய்தனர் என்ற செய்தியைக் கண்ணகிக்குத் தன் வாக்கால் கூறாமல், குரவைமுடித்து நீராடி வந்து நின்ற ஆயமகளிர்க்கு மறையிற் கூறி, அவர்களோடு கூடித் தானும் விம்மி நின்றாள்; கண்ணகியின் அழகையும் இளமையையும் தனிமையையும் கண்டு ஆற்றாத

வளாய் நெஞ்சம் உருகிச் சொல்ல நாவெழாத நிலையில் நின்ருள்.

இந்த நிலையில் தன்னுடைய தோழியும் புதிதாக வந்தவளும் கூடிப் பேசுவதைக் கண்ட கண்ணகியின் உள்ளம் கவலை கொள்ளத் தொடங்கியது. சென்ற கணவன் மீண்டு வரவில்லையே என்ற கவலை அவள் உள்ளத்தை மிகுதியாக வருத்தத் தொடங்கியது. அந்த வருத்தம், தோழியரும் வந்தவளும் தன்னை விட்டுத் தனியே மறை மொழி பேசுவதைக் கண்டு மேலும் பெருகியது. அங்ஙனம் பேசியவர்கள் தன்னைத் துயரக் குறிப்புடன் காணுவதையும் கண்ட கண்ணகி சொல் லாடவோ செயலாடவோ முடியாத நிலையில் இருந் திருக்கவேண்டும். துயரம் மிகுந்தது. அவள் இரங்கிக் கூறத் தொடங்கி விட்டாள் :

“கணவனைக் காணவில்லை. நெஞ்சம் கலங்குகின் றது. ஆய்ச்சியரெல்லாம் தனித்துப் பேசுவதைக் காண என் அச்சம் வளர்கிறது,” என்பதுதான் கண்ணகி இரங்கிக் கூறியதன் சுருக்கம். கணவன் சிலம்பு விற் றுப் பொருள் பெற்று வரச் சென்ருன். சென்றவன் அதுவரையும் வந்திலன். கடைத்தெருவிலிருந்து வந்த வள் ஆய்ச்சியரிடம் தனியாக ஏதோ பேசுகின்ருள். எல் லோரும் தன்னைப் பார்க்கின்றனர்.—இந்தக் காட்சி கண்ணகிக்குத் துயரத்தைத் தந்ததில் வியப்பில்லை. கணவன் வந்திலன்—எல்லோரும் என்னைத் தனியே விட்டு விட்டு ஏதோ பேசுகின்ருர்கள். என்ன ஏற்பட் டது என்று எவரும் கூற மாட்டார்களா என்ற வினு தான் அவள் கொண்ட துயரின் விளைவாக அமைந்து விட்டது.

ஆய்ச்சியரெல்லாம் வந்தவளோடு தனித்து உரையாடியபோது கண்ணகியுடன் இருந்தவள் ஐயை என்பவள். இவள் இடைக்குல மடந்தை மாதரியின் மகள். கண்ணகி ஐயையிடம் தன் கலக்கத்தைக் கூறினுள். ஆய்ச்சியரும் புதியவளும் பேசிக்கொண்டதை அறிந்தவளான ஐயை தான் கேட்டதைக் கூறினுள்:

"அரசன் விரும்பி வாழும் அந்தப்புரத்திலிருக்கும் அழகு நிறைந்த சிலம்பை வருந்தாமல் கவர்ந்துகொண்ட கள்வன் இவனேயாமென்று அரசன் ஏவலாளர் இவனைக் கொலை செய்தலைக் குறித்தனர்," என்ருள். "கொலை செய்தலைக் குறித்தனர்" என்று அவள் கூறியது, கண்ணகிக்குத் திடீரெனப் பேரதிர்ச்சியைத் தரக்கூடாதென்பதால்தான் என்னலாம். கோவலனைக் கொன்ருர்கள் என்ருல், கண்ணகியின் உயிர்க்கு இறுதி ஏற்பட்டுவிடும் என்று எண்ணியே இவ்வாறு கூறினுள் என்று கொள்ளலாம்.

தன் துன்பத்துக்குக் காரணமாக இருந்து கோவலனைப் பிரித்த மாதவியையும் குறை கூருமல் வாழ்ந்த கண்ணகி, மதுரை நகரில் கோவலன் கொலையைப் பற்றி அறிந்த பின்பு மாறினுள். முதலில் அவள் அழுது புலம்பத் தொடங்கினுள் ; கணவனைக் கள்வன் என்று பழி கூறிக்கொன்ற கொடுமையை எண்ணிச் சீற்றம் கொண்டாள்.

"பொங்கி எழுந்தாள் விழுந்தாள் பொழிகதிர்த்
திங்கள் முகிலோடும் சேணிலம் கொண்டெனச்
செங்கண் சிவப்ப அழுதாள்தன் கேள்வனை
எங்கணு என்னு இனைந்தேங்கி மாழ்குவாள்"

(துன்பமாலை, வரி 30-33)

இதுவே கண்ணகி துயரத்தால் அழுது ஏங்கிய நிலை.

மக்கள் எல்லோரும் கோவலனைக் கள்வன் என்று பழிப்பரே என்பதை எண்ணியதும், மன்னவன் செய்த தவறு அவளுடைய நெஞ்சில் கொதிப்பு எழச் செய்தது. அவள் கணவன் இழப்பை எண்ணினாள். அவன் இறந்த பின்பு கைம்மை நோன்பு நோற்று உயிர் வாழ அவள் விரும்பவில்லை; 'பாண்டியன் தவறு செய்ய, நான் அவல வாழ்வு வாழவேண்டுமா!' என்று எண்ணினாள். 'புகழ் படைத்த குடும்பத்துச் செல்வி யாக இருந்தும், குடும்பத்துப் புகழைப் பறிகொடுத்து விட்டு, பழியைத் தான் சூட்டிக்கொண்டு அழியவேண் டுமா!' என்று அவள் எண்ணிய எண்ணமே அவளு டைய பொறுமையை அறவே மாற்றிவிட்டது. கண வன் கொல்லப்பட்டான் என்பதைக் கேட்டதும் துய ருற்றாள்—அழுதரற்றினாள்; கணவன் இறந்தபின் வாழ் வதும் சிறந்த வாழ்வா என்று எண்ணியதும் சீற்றங் கொண்டாள். அச்சீற்றத்தை மேலும் வளர்க்கும் கருவி யாக அமைந்துவிட்டது ஒரு குரல்.

"காய் கதிர்ச் செல்வனே! என் கணவன் கள் வனா? எல்லாம் பார்த்துக்கொண்டு செல்லும் நீயே சொல்," என்று அவள் கதிரவனை நோக்கி முறையிட்ட போது, அவளுடைய செவியில் விழுந்த குரலே அவள் சீற்றத்தை வளர்க்கும் கருவியாக அமைந்துவிட்டது. "நின் கணவன் கள்வனல்லன். அவனைக் கள்வனென்ற இவ்வூரை, பெண்ணே! எரியுண்ணுங்காண்" என்பதே அந்தக் குரல். அந்தக் குரல்தான் கண்ணகிக்குப் பெருந்துணையாக இருந்தது. ஊரெல்லாம் சுற்றி அரற் றிய பிறகும், கணவனுடலைக் கண்டு அழுது அரற்றிய பின்பும், அந்தக் குரல் அவள் நினைவைவிட்டு நீங்காது நின்றது. அதனாலேயே போலும் அவள், கோப்

பெருந் தேவியைப் பார்த்து வஞ்சினம் கூறியபோதும், "யான் ஒரு பத்தினியானால் அரசோடு மதுரையையும் அழிப்பேன்," என்றாள்.

"பட்டாங்கு யானும்ஓர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரையும்"

(வஞ்சினமாலை, வரி 36-37)

இந்தச் சீற்றத்தின் விளைவாகவே கண்ணகி பாண்டியன்முன் வழக்குரைக்கவும், தவறிழைத்த மன்னவனது நாட்டை அழிக்கவும் வஞ்சினம் பூண்டாள். இந்தச் சீற்றத்தின் மூலம் ஆசிரியர் நூலின் மூன்று நோக்கங்களுள் ஒன்றாகிய பத்தினிப்பெண்டிரை உயர்ந்தோர் ஏத்தல் என்ற நோக்கத்தை விளக்கமுறச் செய்கின்றார். திருவள்ளுவர் கற்புடைய பெண்டிரின் ஏவலை மழை கேட்கும் என்றார். அவரினும் ஒருபடி விஞ்சிச் சென்று, கற்புடைய பெண்டிரின் ஏவலைத் தீயும் கேட்கும் எனக் காட்டுகின்றார் இளங்கோ.

கதிரவன் கூறிய மாற்றம் கண்ணகியின் செயல்கட்கெல்லாம் தூண்டுகோலாய் இருந்ததென்று நாம் கருதலாம். கதிரவன் கூறியதைக் கேட்ட கண்ணகி, மிக்க சினங்கொண்டு தன்பால் இருந்த மற்றொரு சிலம்புடன் மதுரைத் தெருக்கள் வழியாகப் புறப்பட்டாள். அவள் கொண்ட துயரத்தின் மிகுதியால் அங்குள்ள மகளிரை நோக்கி, "என் கணவனை முன்போலக் கண்டு அவன் கூறும் நல்லுரையைக் கேட்பேன். அங்ஙனம் கேளேனாயின், என்னை இகழுங்கள்," என்று சூளுரைத்தாள். கண்ணகி மதுரை நகரப் பத்தினிப் பெண்டிர்களை நோக்கி, "பட்டேன் படாத துயரம்" என்று கூறுகிறாள். கணவன் இறந்

தான் என்றதும், அவனால் தான் பெற்ற எல்லாத் துயரங்களையும் அவள் மறந்துவிட்டாள்; போற்றா ஒழுக்கம் புரிந்த அவனுக்காக வருந்தினாள்; அவன் இழப்பு ஈடு செய்ய முடியாததாகும் என்று எண்ணினாள்; எனவேதான், "**படாத துயரம் பட்டேன்**" என்றாள். இந்த மூன்று சொற்களும் கண்ணகியின் வருத்தத்தை நன்கு காட்டுகின்றன. உணர்ந்து கற்பார்க்கு இவற்றிலுள்ள அவலம் புலனாகும். மதுரை நகரப் பெண்களைப் பார்த்துக் கண்ணகி, ஆறு செயல்களைச் செய்வதாகச் சூளுரைக்கின்றாள். அச்சூளுரைகள், கண்ணகி தன் நெறி தவறா நிலையில் நம்பிக்கை கொண்டதையும், அறம் துணை செய்யும் என்று எண்ணியதையும், கற்புடைய பெண்டிர் ஆற்றல் மிக்கவர் என்று பலர் கூறக் கேட்டதையும் துணையாகக் கொண்டே அவளால் கூறப்பட்டனவாதல் வேண்டும். இந்த எண்ணங்கள் அவள் உள்ளத்தில் நிலையான இடம் பெற்ற காரணத்தால்தான் அவள், தான் செய்வதாகக் கூறும் ஒவ்வொரு செயலையும் கூறியதுடன் நில்லாது, 'செய்யாதொழிவனேல், என்னை மக்கள் பழிக்கட்டும், தூற்றட்டும், எள்ளட்டும்' என்றெல்லாம் கூறுகின்றாள்.

## 5. வெற்றிச் செல்வி

கண்ணகி கணவனைக் காணுவதாகச் சூளுரைத்துத் தன் ஒற்றைச் சிலம்புடன் மதுரைத் தெருக்களில் சென்றாள்.

சிலர் கண்ணகிக்குக் கோவலன் இருப்பிடத்தைக் காட்டினர். கணவன் குறையுடலைக் கண்ட கண்ணகி பெரிதும் துயர்கொண்டு அழுதரற்றினாள். தான் வஞ்சினம் கூறியவாறு, கோவலனது எழுச்சி பெற்ற உடலைக் கண்டாள்; 'நீ இங்கு இருக்க' என்று அவன் கூறியதைக் கேட்டாள். அவள் அவ்வளவில் பெருமை கொண்டிருக்க வேண்டும்.

உயிர் பெற்றெழுந்த கோவலன் உடல், அவள் ஆறுதல் பெறும்படி ஒன்றும் கூறாமல்இறந்துவிட்டது. கோவலன் உயிர் இருந்தால் இவ்வாறு நிகழ்ந்திருக்குமா? எனவே, கண்ணகி தன் கண்முன் நடந்த நிகழ்ச்சி மாயமோ என எண்ணினாள். தன் கண்ணீரைத் துடைத்து 'இரு' என்று கோவலன் உடல் வாய் திறந்து கூறியது எவ்வாறு மாயமாகும்? கோவலனும் இல்லை, மாயமும் இல்லை என்றால், அவள் கண்டதையும் கேட்டதையும் என்னென்று சொல்லுவது? இந்த நிலையில் கண்ணகி தன்னை மயக்க முறச்செய்தது தெய்வந்தானோ என்றும் ஐயுறுகின்றாள். கணவன் உடல் எழுந்து தன் கண்ணீரைக் கையால் மாற்றி,

"மலருண்கண் இருந்தைக்க" என்று கூறியதை எண்ணிய கண்ணகி ஏதும் விளங்காமல் மயங்கினாள்.

கண்ணகி எதுபற்றி எண்ணி மயங்கினாலும், கோவலன் மூலம் அவன் ஏன் அவ்வாறு கொல்லப்பட்டான் என்பதை அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள் எதிர் பார்த்தபடியே கணவன் உடல் உயிர் பெற்று எழுந்ததாயினும், கொலை நடந்த விதத்தைப்பற்றி ஒன்றுமே கூறவில்லை. கோவலன் கூறிய 'இரு' என்ற வார்த்தையைக் குறித்துக் கண்ணகி சிந்திக்கலானாள். கோவலன் கொல்லப்பட்ட காரணம் தெரிந்தால், அது நேர்மையற்ற செய்கை என்று கூறிக் கணவனின் புகழுக்கோர் இழுக்குவராமல் காக்கலாம் என்றும், அவன் கொலை 'வினைப்பயனாக' நடந்தது என்று தெரிந்தால் கணவனுடனேயே தானும் இறக்கலாம் என்றும், இரண்டும் தெரியாமல் இடர்ப்பட வேண்டி இருக்கிறதே என்றும் அவள் வருந்தி யிருக்க வேண்டும். எனவேதான் அவள் தன் எண்ணங்கட்கெல்லாம் சிகரம் வைத்தாற் போன்று,

" காய்சினந் தணிந்தன்றிக் கணவனைக் கைகூடேன் ;
தீ வேந்தன் தனைக்கண்டித் திறங்கேட்பல் யான்"
(ஊர்சூழ்வரி, வரி 70, 71)

என்றாள்.

அரசனைச் சென்று கண்டு கொலைக்குரிய காரணத்தைக் கேட்பது என்ற துணிவுக்கு அவள் வந்தாள். முன்னர் நடந்த நிகழ்ச்சி யொன்றின் உதவியால் அவள் துணிவு செயல் பெறத் தொடங்கியது. கோவலன் மாதவியிடமிருந்து மன வேறுபாட்டுடன் கண்ணகியை அடைந்தான் என்பதைக் கண்டோமல்

லவா ? கோவலன் கண்ணகியை அடைவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்புதான் தேவந்தியிடம் கண்ணகி தான் கண்ட கனவைக் கூறினாள். புகாரில் அவள் கண்ட கனவின் நினைவுதான் அரசனைச் சென்று கண்டு கொலைக்குரிய காரணத்தைக் கேட்பது என்ற எண்ணத்தை உறுதிப்படுத்தியது. அவள் கனவின் நிகழ்ச்சியை ஒவ்வொன்றாய் எண்ணிப் பார்க்கையில் வேதனை கொண்டிருக்கவேண்டும். கனவினை எண்ணிப் பார்த்தவள், நடைபெற்ற நிகழ்ச்சிகளை எண்ணிய போது, அவற்றை நிகழாமல் தடுத்திருக்கலாமே என்று எண்ணியிருக்கவேண்டும். அந்த எண்ணத்தின் மிகுதியால் கண்கள் நீரை ஆறாக வெளிப்படுத்தின. கனவை எண்ணியவள், நடைபெற்ற நிகழ்ச்சிகளை நிகழாமல் தடுத்திருக்கலாமே என்று எண்ணி வருந்தினாள் என்பதை ஆசிரியர்,

"..................................................
இடருற்ற தீக்கனா
நின்றாள் நினைந்தாள்
நெடுங்கயற்கண் நீர் சோர"

(ஷை. வரி, 72, 73)

என்று குறிப்பிடுகின்றார். கோவலனது இறப்பு, தன் விழிப்பின்மையாலே ஏற்பட்டது என்பதை அறிந்ததாலேயே கண்ணகி கதறி அழாமல், நீருகுப்பதுடன் நின்று விட்டாள் என்றும் கொள்ள இடமுள்ளது. கணவன் கொல்லப்பட்டான் என்று ஐயை மூலம் அறிந்ததும், கண்கள் சிவக்க நிலத்தில் விழுந்து புரண்ட கண்ணகி, இப்பொழுது நீருகுப்பதுடன் நின்றமை, கொலை தன் விழிப்பின்மையால் ஏற்பட்டது என்ற எண்ணம் கொண்டதால்தான் என்று கொள்ளலாம்.

நடைபெற்ற நிகழ்ச்சிகளை எண்ணி வருந்துவதால் பய னில்லை என்று அவள் தன் மனத்தைத் தேற்றிக் கொண்டு, கணவன்மீது சுமத்தப்பட்ட பழியைப் போக்க, அரசனைக் காணவேண்டுமென்று உறுதி கொண்டு, தன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அரசவை சென்ருள்.

அரசவை சென்றவள் வழக்காடித் தன் கணவன் கள்வனல்லன் என்பதை மெய்ப்பித்துவிட்டாள். அரசனும் தன் நெறிபிறழ்ந்த செய்கையை எண்ணி வெட்கமுற்று இறந்தான். அவன் பிரிவு தாளாமல் மாதேவியும் மயக்கமுற்ருள். இவற்றை யெல்லாம் கண்ட பின்னும் கண்ணகியின் மனம் அமைதி பெற வில்லை. தன் கணவனைக் கள்வன் என்று கூறிக் கொலை செய்த கொடுமை மிக்க ஆட்சியுள்ள மதுரையையே அழிக்க வேண்டுமென உறுதி கொண்டாள்; மது ரையை எரியுண்ணும் என்று முன்பு கதிரவன் கூறி யது நினைவுக்கு வரவே, தன் எண்ணத்தை வலுப் படுத்திக்கொண்டாள். அவள் சீற்றத்தால் மதுரையும் அழிந்தது. இது நிற்க.

கண்ணகி மன்னன்முன் சென்றபோது நீர் மிகுந்த கண்களுடன் சென்ருள். மன்னவன் அவளை,

"நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்,
யாரை யோநீ மடக்கொடி யோய்"

(வழக்குரை காதை, வரி 48, 49)

என்று கேட்டான். கண்ணகியின் சீற்றத்தைக் கண்டு மன்னன் அஞ்சவில்லை என்றும், அவளது கண்ணீரைக் கண்டு மன்னன் அஞ்சினுன் என்றும் ஆசிரியர் உணர வைக்கிருர். கண்ணகியின் கண்ணீர்தான் மன்னனை

அழித்தது என்றும் அவர் கூறுகின்ருர். அவளது கண்ணீர்க் கோலத்தைக் கண்டு அஞ்சிய காரணத்தால் தான் செழியன் கூடு ஆயினுன் ; உயிர் தோற்ருன். இதனை,

" காவி உகுநீரும் கையில் தனிச்சிலம்பும்
ஆவி குடிபோன அவ்வடிவும்—பாவியேன்
காடெல்லாம் சூழ்ந்த கருங்குழலும் கண்டஞ்சி
கூடலான் கூடா யினுன்."

" மெய்யில் பொடியும் விரித்த கருங்குழலும்
கையில் தனிச்சிலம்பும் **கண்ணீரும்**—வையைக்கோன்
கண்டளவே தோற்ருன் அக் காரிகைதன் சொல்செவியில்
உண்டளவே தோற்ருன் உயிர்."

(வழக்குரை, வெண்பாக்கள்)

என்று ஆசிரியர் கூறுகின்ருர். இப்பகுதியும், கண்ணகிக்குக் கோயிலெடுத்து வாழ்த்திய வாழ்த்தொலியில்,

" தொல்லை வினையால் துயர்உழந்தாள் **கண்ணின்நீர்**
**கொல்ல** உயிர்கொடுத்த கோவேந்தர் வாழியரோ "

என்றுள்ள வாழ்த்தும் கண்ணகியின் கண்ணீராற்றலைக் கூறுகின்றன. முதலிரண்டு வெண்பாக்கள் கண்ணகியின் கண்ணீரைக் கண்டு அஞ்சியே காவலன் தோற்ருன் என்றும், பின்னுள்ள வாழ்த்துக் கண்ணீராற்றலே பிற எல்லா வகை ஆற்றலினும் சிறந்தது என்றும் அறிவுறுத்துகின்றன.

அரசையும் மதுரையையும் அழித்தது கண்ணகியின் கண்ணீரோ சீற்றமோ என்ருல், இரண்டும் இரு செயல்களைச் செய்து முடித்தன என்று கூறலாம். சீற்றத்தைவிடக் கண்ணீருக்கே சிறந்த ஆற்றல் உண்டு என்பதே நம் முன்னேயோர் கண்ட உண்மையாகும்.

"தோற்றத்தால் பொல்லார் துணையிலார் நல்கூர்ந்தார்
மாற்றத்தால் செற்ருர் எனவலியர் அட்டக்கால்
ஆற்ருது **அவரழுத கண்ணீர்** அவரவர்க்குக்
கூற்றமாய் வீழ்ந்து விடும்"

என்று பழமொழி நானூறும்,

"அல்லல்பட்டு ஆற்ருது அழுதகண் ணீர்அன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை"

என்று திருக்குறளும் கண்ணீரின் ஆற்றலைக் கூறுகின்றன. நால்வகைப் படைகளும் செய்து முடிக்கக் கூடாத செயல்களைக் கண்ணீர்ப்படை எவ்விதப் போருமில்லாமல் எளிதாகச் செய்து முடித்துவிடும் ஆற்றல் பெற்றது என்று நம் முன்ஞேர் நம்பினர். வல்லரசுகள் பலவும், பேரரசர்கள் பலரும் அழிந்தமை அல்லல் பட்டு ஆற்ருது அழுதவரின் கண்ணீராலேயே என்றுதான் உலக வரலாறு கூறுகிறது. இந்த அடிப்படையை நன்குணர்ந்தவராகிய ஆசிரியர், "அல்லல் உற்று ஆற்ருது அழுவாள்" என்று கூறிக் கண்ணகியின் கண்ணீருக்கு ஆற்றலை அளிக்கிருர்.

இங்ஙனம் கண்ணீரின் ஆற்றலாலும் சீற்றத்தின் ஆற்றலாலும் கண்ணகி, தன் கணவனைக் 'கள்வன்' என்று கூறிக் கொலை செய்த அரசனையும், அவனுட்சிக்கு உட்பட்ட மதுரை மூதூரையும் அழித்தாள். இவ்விரண்டு நிகழ்ச்சிகளுக்கும் பின்பு நாம் மீண்டும் பழைய கண்ணகியைக் காண்கிருேம். "என் கணவரைக் காண்பதற்கு முன்பு ஓர் இடத்தில் இருக்கவும் மாட்டேன்; நிற்கவும் மாட்டேன்," என்று கூறிக் கொற்றவைக் கோயிலின் வாயிலில் தன் கைவளையலை உடைத்து எறிந்தாள். அதன் பின்னர் அவள் கூறிய கூற்று அவலச் சுவையுடன் விளங்குகின்றது:

"கிழக்கு வாயிலின் வழியாக யான் இந்த மதுரை நகருள் புகுந்தேன்; மேற்கு வாயிலின் வழியாக இந்த மதுரை நகரை விட்டுத் தனியளாய்ச் செல்கின்றேன். கிழக்கு வாயிலின் வழியாக மதுரையில் புகுந்தபோது என் கணவர் என்னோடு இருந்தார். இப்போது, நகரத்தின் மேற்கு வாயிலாக வெளியேறும்போது என் கணவரை இழந்து தனியே செல்கின்றேன்."

" கருத்துறு கணவற் கண்டபின் அல்லது
இருத்தலும் இல்லேன் நிற்றலும் இலனெனக்
கொற்றவை வாயிற் பொற்றொடி தகர்த்துக்
கீழ்த்திசை வாயிற் கணவனொடு புகுந்தேன்
மேற்றிசை வாயில் வறியேன் பெயர்கென "

(கட்டுரை காதை, வரி 179-183)

என்று உள்ளம் நொந்து கூறினாள்.

மதுரையை எரிப்பதற்கு முன்பு கண்ணகி தன் செயலை எண்ணிப் பார்த்திருக்க வேண்டும். கோவலனுடன் மதுரை வந்ததையும், கோவலன் மாதரி மனையிலிருந்து உணவுண்டபின் சிலம்பை ஏந்தியவாறு, 'மாறி வருவன், மயங்காது இரு' என்று கூறிச் சென்றதையும், ஆய்ச்சியர் மூலம் கணவன் கள்வன் என்று கூறப்பட்டுக் கொலை செய்யப்பட்டதை அறிந்ததையும், அதைக் கேட்டு ஆற்றாமல் தான் மதுரை நகரப் பத்தினிப் பெண்களை விளித்துச் சூளுரைத்ததையும், சூளுரைத்ததற்கேற்பவே கணவனைக் கண்டு பேசியதையும், அதன் விளைவாக அரசவை சென்று முறையிட்டு வென்றமையையும் அவள் எண்ணியிருக்க வேண்டும். பொறுமையுடன் இந்நிகழ்ச்சிகளை எல்லாம் அவள் தொடர்ச்சியாக்கி எண்ணியிராள் எனினும், இந்நிகழ்ச்சிகளின் சாயலையேனும் அவள் எண்ணியிருக்க

வேண்டும். அரசனும் அவன் மனைவியும் இறந்தது கண்டவள், தன் செயலால் ஈருயிர்கள் அழிந்தனவே என்று இரக்க உணர்வு கொண்டிருக்கவேண்டும். அவள் கொண்டிருக்கக் கூடும் என நாம் கருதும் இரக்க குணம் நீடித்திருக்கக்கூடிய அளவில் அவள் சீற்றம் இடந்தரவில்லை. அதனாற்றான் அவள் சீற்றங் கொண்ட நிலையிலேயே,

"பட்டாங் கியானுமோர் பத்தினியே யாமாகில்
ஒட்டேன் அரசோடு ஒழிப்பேன் மதுரையும்"

என்றாள். மதுரையை அழிக்கவேண்டுமென்ற உறுதி கொண்ட பின்பு மீண்டும் அவள் உள்ளம் தன் எண்ணத்துக்கும் செயலுக்கும் இடையே போராட்டத்தை விளைவித்து முடிவு காண முனைகின்றது. அதன் விளைவாக அவள்,

"யானமர் காதலன் தன்னைத் தவறிழைத்த
கோநகர் சீறினேன் குற்றமிலேன் யான்"

(வஞ்சினமாலை, வரி 41-42)

என்று கூறி மதுரையை அழலுக்கு விருந்தாக்கினாள்.

மதுரையின் மேற்கு வாயில் வழியாக நடந்தவள் இரவும் பகலும் அறியாமல் வையை ஆற்றின் கரையில் நடந்தாள்; திருச்செங்குன்றத்தில் அடி வைத்து ஏறினாள்; வேங்கை மரமொன்றின் நிழலில் நின்றாள். அப்போது அவள் மனம் மீண்டும் தன் சீற்றத்தின் விளைவான செயல்களை எண்ணியிருக்கவேண்டும். வேங்கை மர நிழலில் நின்றவள், "**தீத்தொழிலாட்டியேன்**" என்று தன்னைக் கூறிக் கொண்டாள். கண்ணகியின் மனம் மதுரைக்கு வந்த பின்னர் நடைபெற்ற நிகழ்ச்சிகளை எல்லாம் எண்ணிச் சலிப்படைந்திருக்கவேண்டும்;

அதனுற்ருன், "நான் ஒரு பாவி" என்று கூறிக் கொண்டாள்.

கண்ணகியின் வாழ்க்கை முடிவாகிய இப்பகுதியில் அவளிடம் இடையில் இருந்த சீற்றத்தைக் காணேம். பழைய அன்பு வாழ்க்கையே அவளிடம் காணமுடிகிறது. "கணவனெடு புகுந்தேன், கணவனை இழந்து வறியவளாய்ச் செல்லுகின்றேன்", "நான் ஒரு பாவி" என்று கூறுவதிலும் ஏங்குவதிலும் பழைய மென்மைப் பண்பையே நாம் காண்கிருேம். "கணவனைக் கண்டால் அல்லாமல் இருந்தலும் இல்லேன், நிற்றலும் நில்லேன்," என்று கூறிச் சென்றவள், திருச்செங்குன்று வேங்கைமர நிழலில் ஏக்கத்துடன் "தீத்தொழிலாட்டியேன்" என்று கூறி நின்றதில் பழைய கொள்கைத் திண்மையே விளங்கக் காண்கிருேம்.

இங்ஙனம் தான் கொண்ட கொள்கையில் வெற்றி கண்டு **வெற்றிச் செல்வி**யாக விளங்கிய கண்ணகி திருச்செங்குன்றில் வேங்கைமர நிழலில் தங்கிப் பதினன்காம் நாளன்று கணவனுடன் விண்ணவர் வாழ்த்த விண்ணுலகு சென்ருள் என்பது ஆசிரியர் கூற்று.

# 6. வஞ்சியில் வழிபடு தெய்வம்

புகார் நகரத்தில் செல்வக் குடும்பத்துச் செல்வியாகப் பிறந்தவள், அந்நகரத்துச் செல்வன் ஒருவன் மகனுக்கு மனைவியாகி இல்லறம் நடத்தி, பலவகைப் போராட்டங்கட்கு ஆட்பட்டு அல்லலுற்ற வாழ்க்கை வரலாறு, அவள் விண்ணவர் வாழ்த்தக் கணவனுடன் விண்ணகம் சென்றாள் என்பதுடன் முடிவடைந்து விடுகின்றது. ஆனால் ஆசிரியர் கண்ணகியின் வாழ்க்கையை மதுரைக் காண்டத்துடன் நிறுத்திவிட விரும்பாமல் மேலும் தொடர்கின்றார்; புகார் நகரப் பாவையின் வீரவுரையை மதுரை மாநகரில் கேட்ட நாம், அவளது வாழ்த்துரையை வஞ்சி மாநகரில் கேட்குமாறு செய்கின்றார். புகார் நகரில் அமைதிக்கு நிலைக்களமாகத் தோன்றியவள் மதுரை நகரில் வீரப்பாவையாகத் திகழ்ந்ததையும், வஞ்சி நகரில் வரந்தரு தெய்வமாக மாறியதையும், நாம் எண்ணி வியக்குமாறு செய்வதே ஆசிரியரின் நோக்கம். கண்ணகியை நாம் வழிபட வேண்டும் என்பதே ஆசிரியர் கருத்தாகும்.

வஞ்சிக் காண்டம் ஆசிரியரால் எழுதப்பட்டமையால், அக்கால மக்களின் மன நிலையையும் ஒருவாறு நாம் உணர முடிகிறது. அன்று வாழ்ந்த மக்கள் துன்பியலை ஏற்குமளவில் மனப்பக்குவம் அடையவில்லை என்றும், வாழ்க்கையில் ஏதேனும் துயர நிகழ்ச்சிகள்

அமைந்து அதனல் வாழ்க்கையே அவலமாகி விட்டாலும் அதற்கோர் காரணம் காட்டி அக்காரணத்தில் இன்பம்பெற வழியாய்க்கொண்டனர் என்றும் நினைக்க இடமுள்ளது. அதனுற்போலும் மதுரைக் காண்டத்தில் நாம் காணமுடியாத கண்ணகியின் உள்ள அமைதியை வஞ்சிக் காண்டத்தில் ஆசிரியர் காட்டுகின்ருர். இந்த அமைதி கூறவே ஆசிரியர் வஞ்சிக் காண்டத்தை இணைத்தார் என்னலாம்.

ஆசிரியர் வஞ்சிக் காண்டத்தைச் சேர்த்தமை செங்குட்டுவனின் புகழ் பாடவே என்று சிலர் கூறுவர். இக் கூற்றும் பொருந்துவதாக உள்ளமை காணலாம். வஞ்சிக் காண்டத்துக் கதைப்பகுதி கண்ணகிக்குச் சேரன் கோவில் கட்டியது ஒன்றேயாகும். செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோவில் கட்டிய வரலாற்ருேடு அவள் மாநில மன்னவர்க்கு வரம் தந்ததையும் வஞ்சிக் காண்டம் கூறுகின்றது.

வஞ்சிக் காண்டத்தில் கதையுடன் தொடர்புடைய பகுதிகளாகக் குன்றக் குரவை, வாழ்த்து, வரம் என்ற காதைகள் உள்ளன. இவைதவிர ஏனைய பகுதிகள் சேரனைச் சிறப்பிக்கவே எழுதப்பட்டன. எனவே, வஞ்சிக் காண்டம் செங்குட்டுவனின் சிறப்பைக் கூறவே எழுந்தது என்னும் கூற்றும் பொருந்துகின்றது.

கண்ணகி கடவுள் தன்மை எய்தியதைச் சிறப்பிப்பதே ஆசிரியர் நோக்கமாக இருந்திருத்தல் வேண்டும். மங்கல வாழ்த்துக் காதையில் ஆசிரியர் கண்ணகியை அறிமுகப்படுத்திப் பின்னர்க் கோவலனை அறிமுகப் படுத்தினுர். இவ்வாறு கண்ணகியை முற்கூறியதற்குப் பத்தினியை ஏத்துதல் என்பதே உட்கோளாகும் என்று அடியார்க்கு நல்லாரும் குறித்துள்ளமை ஈண்டு

நோக்குதற்குரியது. மதுரைக் காண்டத்தோடு கண்ணகியின் கதை முடிக்கப்பட்டிருந்தால், கண்ணகியின் சிறப்பு நம் மனத்தில் நிலே பெற்றிராது. கோவலன் கொலே தொடங்கி நிகழ்ந்தவை எல்லாம் நாம் சற்றும் எதிர்பார்த்திருக்க முடியாதவை. அவை யாவும் இயற்கையிறந்த நிகழ்ச்சிகள் ஆகையால், அவை நம் மனத்தே திகைப்பையும் வியப்பையும் தோற்றுவித்தன. இயற்கையிறந்த 'நிகழ்ச்சிகளினுல் வியப்பும் திகைப்பும் கொண்ட காரணத்தால்தான் கண்ணகி விண்ணுலகு சென்ற காட்சியைக் கண்டு நாம் மெய்ம் மறந்தோம். இந்நிகழ்ச்சிகளே எல்லாம் நாம் மீண்டும் எண்ணிப் பார்க்கும்போது, **உண்மையில்** இவையாவும் நடைபெரு என்ற எண்ணம் தோன்றுவது இயற்கை. இந்த எண்ணம் தோன்ருமல் இருப்பதற்காகவே, கண்ணகியை வஞ்சி நாட்டில் கண்டு நாம் வழிபடும் நிலேயை ஆசிரியர் உண்டாக்கிவிட்டார்.

வஞ்சிக் காண்டத்தில் கண்ணகியை, இளங்கோ வேண்மாள், சாத்தனுர், செங்குட்டுவன் ஆகியோர் போற்றி வணங்கக் காணுகின்ருேம். சிலப்பதிகாரம் கற்பு என்னும் திண்மையுடைய பெண்ணின் பெருமையைக் கூற எழுந்த பெருங்காப்பியமன்ருே?

ஆசிரியர் தொடக்கத்திலிருந்து இறுதிவரையும் வழிபாட்டு மனத்துடனேயே நூலே எழுதியுள்ளார் என்பதையும், அதனுலேயே அவர் வஞ்சிக் காண்டத்தைச் சிறப்பாகப் பாடினுர் என்பதையும் அறியலாம். ஆசிரியர் எவ்வாறு வழிபாட்டு மனத்துடனேயே தொடக்கத்திலிருந்து கண்ணகியைச் சித்திரித்துள்ளார் என்பதை இங்குக் காண்போம். கோவலனும் மாதவியும் வாழ்ந்த வாழ்க்கையை விரிவாக விளக்கும் ஆசிரி

யர், கோவலனும் கண்ணகியும் வாழ்ந்த வாழ்க்கை யைச் சில சொற்களால் தூய வரம்புடன் கூறுகின்றார். "தாரும் மாலையும் மயங்கின" என்றுதான் ஆசிரியர் கோவலன் கண்ணகியின் இன்பவாழ்வைக் கூறுகின் றார். இதனில் ஆசிரியரது வழிபாட்டு மனம் இருப்பக் காணலாம்.

மாதவியைக் கோவலனுக்கு அறிமுகமாக்குவதற்கு முன்னரும், கோவலனும் மாதவியும் கூடிவாழ்ந்த போதும், அவளைப் பற்றிக் கூறும்போதும் அவளது ஆடம்பர வாழ்க்கையை ஆசிரியர் நன்கு விளக்குகின் றார். இந்திர விழாவின்போது அவள் பல்வேறு வகை யான அணிகலன்களை அணிந்திருந்தாள் என்றும் அவர் கூறுகின்றார். ஆனால் அவர் கண்ணகியைத் தொடக் கத்திலிருந்தே தூய்மையும் எளிமையும் பொருந்தவே வருணித்துள்ளார். திருமணத்தில் கண்ணகியை,

> "மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
> காதலாள் பெயர்மன்னும் கண்ணகிஎன் பாள்மன்னோ"
> (மங்கல வாழ்த்து, வரி 28-29)

என்றுதான் எளிய முறையில் அறிமுகம் செய்கின்றார்; மனையறம் படுத்த காதையில் கோவலன் கண்ணகியைப் பாராட்டும்போதும் அவள் இயற்கை எழிலையே வியந்து போற்றுவதாகக் கூறுகின்றார். இங்ஙனம் வாழ்க்கையின் தொடக்கத்திலேயே ஆடம்பரமும் செல் வச் செருக்கும் இல்லாதவாறு கண்ணகியை அவர் கூறிய காரணம், அவருடைய மனத்தில் இடங்கொண்ட வழிபாட்டு உணர்வே ஆகும். பெருஞ் செல்வக் குடும் பத்தில் பிறந்தவளைத் தவக்கோலமுடையவளாக வரு ணிப்பதில் ஆர்வமும் திறமையும் கொண்ட ஆசிரியர்,

அவளுடைய செல்வ வாழ்க்கையைத் துணையாகக் கொண்டு அவளை நமக்குக் காட்டவில்லை. கோவல னுடன் கண்ணகி வாழ்ந்த வாழ்க்கையைக் கூறுவதி லும், அவன் அவளைவிட்டுப் பிரிந்து மாதவியிடம் சென்ற பின்பு கண்ணகியின் நிலையைக் கூறுவதில்தான் ஆசிரியர் மிகுந்த ஆர்வம் காட்டியுள்ளார்.

"அஞ்செஞ் சீறடி அணிசிலம்பு ஒழிய
மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்
பவள வாள்நுதல் திலகம் இழப்பத்
தவள வாள்நகை கோவலன் இழப்ப
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி......"

(அந்திமாலை, வரி 47-57)

இவ்வாறு வருணிப்பதிலும் ஆசிரியரது வழி பாட்டுணர்ச்சியை நாம் அறிய முடிகிறது. இதனுற் ருன் ஆசிரியர், 'கண்ணகி தேவர்களும் பாராட்டப் படும் பண்புடையவள்' என்று விளக்கியதுடன் நில் லாமல், அவளை நாம் வழிபடும் தெய்வமாகவும் செய்து விட்டார்.

(வஞ்சிக்காண்டத்தின் முதற் காதையாகிய குன்றக் குரவை, கண்ணகி விமானமேறிச் செல்லக் கண்ட மலை வாழ் மக்களாகிய வேட்டுவர், மிகுந்த வியப்புற்றுக் கண்ணகியைத் தம் குலதெய்வமாகக் கருதி அவள் பொருட்டுக் குரவைக் கூத்தாடுவதைத் தெரிவிக்கின்

றது. குரவை என்பது வட்டமாகப் பெண்கள் நின்று கைகோத்து ஆடும் ஆடல். அதில் ஆண் களும் பங்கு கொள்வர்.

மதுரைக் காண்டத்தில் கண்ணகி செயல்களையும் அவள் தோற்றத்தையும் கண்டு திகைப்பும் வியப்பும் கொண்டிருந்த நாம், இப்பொழுது அவளை வேங்கைமர நிழலில் காணும்பொழுது பெரிதும் வருந்துகிறோம். எவரும் அணுகுதற்கு அரிய நிலையில் காட்சியளித்த கண்ணகி, குறப்பெண்கள் அணுகும் நிலையில் காட்சி அளிப்பதை வேங்கைமர நிழலில் நிற்கும்போது நாம் காணமுடிகிறது. அடக்க முடியாத சினத்தை வெளி யிட்டவள்,

> " மலைவேங்கை நறுநிழலின் வள்ளி போல்வீர், மனநடுங்க
> முலையிழந்து வந்துநின்றீர் யாவிரோவென முனியாதே
> மணமதுரையோ டரசுகேடுற வல்வினைவந் துருத்தகாலைக்
> கணவனையங்கு இழந்துபோந்த கடுவினையேன் யான்."
>
> —(குன்றக்குரவை, 3-6)

என்று தன் உறுப்புக் குறைவைக் குறிப்பிடும் பெண் களைச் சிறிதும் சினந்து கொள்ளாமல் விடையளிக்கின் றாள். இக்காட்சி மனத்தில் ஆழ்ந்து பதிகின்றது. மனித நிலையில் இருந்தவள் தன் ஒப்பற்ற குணங் கார ணமாக வானவர் போற்றும் உயர்நிலை அடைகிறாள் என்ற எண்ணம் நம் மனத்தே இடம் பெறுகின்றது.

குன்றக் குரவையில் கண்ணகியை வழிபடவேண்டு மென்று குரவர்கள் கூறுகின்றனர்.

> " இவள்போலும் நங்குலக்கோர் இருந்தெய்வம்
> .................... இல்லையாதலின்
> தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே"
>
> (குன்றக்குரவை, வரி 10-12)

"ஒருமுலை இழந்த நங்கைக்குப்
பெருமலை துஞ்சாது வளஞ்சுரக் கெனவே"
(ஷை வரி 21-22)

"கோமுறை நீங்கக் கொடிமாடக் கூடலைத்
தீமுறை செய்தாளை ஏத்தியாம் பாடுகம்
(ஷை வரி 11-12)

"கான நறுவேங்கைக் கீழாளோர் காரிகையே
கான நறுவேங்கைக் கீழாள் கணவனொடும்
வானக வாழ்க்கை மறுதரவோ வில்லாளே
மறுதர வில்லாளை ஏத்தி நாம்பாடப்
பெறுகதில் லம்மஇவ் வூருமோர் பெற்றி"
(ஷை வரி 21-25)

இவ்வாறு குரவர்கள் மூலம் கண்ணகி வழிபாட்டுக்குரி யவளே என்றும், நாம் வழிபடத்தகும் தெய்வம் அவள் என்றும் ஆசிரியர் கூறுகின்றார். இப்பகுதி ஆசிரியரின் நோக்கத்துக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளது.

காட்சிக் காதையில், தாம் கண்ட வியப்புறு காட்சி யைக் குறவர்கள், மலைவளம் காண மனைவியுடன் வந்த செங்குட்டுவனிடம்,

"கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை இழந்து தனித்துயர் எய்தி
வானவர் போற்ற மன்னொடுங் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்
........................
நின்னாட் டியாங்கள் நினைப்பினும் அறியேம்"
(காட்சிக் காதை, வரி 57-62)

என்று கூறினர்.

இங்கும் "**வானவர் போற்ற** வானகம் பெற்ற னள்" என்று கண்ணகியை ஆசிரியர் குறிப்பிடு கின்றார்.

செங்குட்டுவன் கண்ணகிக்குக் கோவில் எடுப்பிக்க வேண்டுமென எண்ணிய பின்பு, இமயஞ் சென்றே கல் கொணர வேண்டுமென்றான். அப்பொழுது அவன்,

" மடவதின் மாண்ட மாபெரும் பத்தினி"
(காட்சிக் காதை, வரி 129)

என்று கண்ணகியைக் குறிப்பிடுகின்றான்.

வாழ்த்துக் காதையில் கண்ணகி தெய்வக் காட்சி நல்கியதைக் கண்ட செங்குட்டுவன்,

" என்னேயிஃ தென்னேயிஃ தென்னேயிஃ தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றோட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால்"
(வாழ்த்துக்காதை, செய்யுள் 9)

என்று வியந்தான் ; வணங்கி நின்றான்.

தெய்வ ஒளி பொருந்தி நின்ற கண்ணகி யாவரும் உண்மையை அறியும்படி,

" தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன்கோயில்
நல்விருந் தாயினான் நானவன் தன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்
என்னோடும் தோழிமீர் எல்லீரும் வம்மெல்லாம்"
(வாழ்த்துக் காதை, செ. 10)

என்றாள்.

இதற்குப் பின்னர் நாம் கண்ணகியின் பேச்சை வரந்தரு காதையில் இறுதியாகக் கேட்கின்றோம். " **தந்தேன் வரம்**" என்பதுதான் கண்ணகி பேசிய இறுதிப்பேச்சு.

இதுகாறும் நாம் கண்ணகியைக் குன்றக் குரவர், சாத்தனார், செங்குட்டுவன் ஆகியோர் பாராட்டியதைக்

கண்டோம். செங்குட்டுவன் மனைவி இளங்கோ வேண்மாள் கண்ணகியைப் பற்றி,

" .......................... நம்அகல்நாடு அடைந்தவிப்
பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்"
(காட்சிக் காதை, வரி 113-114)

என்று கூறினள். கண்ணகியின் செவிலித்தாயான காவற்பெண்டு, கோவலன் கொலையுண்டதை மாடலன் வழிக் கேட்டு வஞ்சியடைந்தாள் ; சேரன்முன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கையில், கண்ணகியின் சிறப்பைக் கூறுகின்றாள் :

"அழகு தோன்றும் மென்மைத் தன்மையுடைய மாதவியைக் கோபித்துக் கொள்ளாதவளாய், காதற் கணவனுடைய கைப்பிடித்துக் குடம் புகுந்தறியாத கிணறுகளையுடைய காட்டிடத்தே சென்ற **கண்ணகிக்கு** நான் செவிலி."

இவர் தம் பாராட்டுரைகளைக் கொண்டு கண்ணகியின் சிறப்பை ஆசிரியர் நமக்கு அறிவிக்கின்றார். இதனல் கண்ணகியை வழிபடும் தெய்வமாக்கிவிட வேண்டும் என்ற அவர் குறிக்கோளும் நிறைவேறுகிறது.

"பூம்புகாரில் கண்ணகி", "மதுரையில் கண்ணகி", "வெற்றிச் செல்வி" என்ற தலைப்புக்களில் நாம் கண்ணகியைப் பற்றிய பல செய்திகளை அறிந்தோம் ; "வஞ்சியில் வழிபடு தெய்வம்" என்னும் இக்கட்டுரையில், கண்ணகி வழிபடும் தெய்வம் ஆகியதையும் கண்டோம். இதுகாறும் நாம் அறிந்தவைகளைக் கொண்டு, சாதாரண மகளாக இருந்த கண்ணகி, பிறர் கண்டு தொழும் அளவில் உயர்ந்தமைக்குக் காரணம்–அவளிட

மிருந்த உறுதி வாய்ந்த மனமும் நம்பிக்கையுமே என்னலாம். அவளிடம் உறுதி மனம் இளமையிலிருந்தே வளர்ந்தது; நம்பிக்கையும் அவ்வாறே. இந்த இரு சிறந்த பண்புகளே கண்ணகி தன் வாழ்வில் பெற்ற உயர்வுக்குக் காரணம். கண்ணகி வழிபடு தெய்வமாக விளங்கி நமக்கறிவிக்கும் அறிவுரையும் நாமெல்லாம் உறுதி வாய்ந்த மனமும் நம்பிக்கையும் கொண்டு வாழ வேண்டும் என்பதே யாகும்.

கண்ணகியைப் பற்றி மேலும் சில செய்திகளைக் கூறி இக்கட்டுரையினை முடிப்போம் :

பேராசிரியர் டாக்டர் மா. இராசமாணிக்கனர் "கண்ணகி" என்னும் தமது கட்டுரையில், கண்ணகி கவிபாடும் ஆற்றல் பெற்றிருந்தாள் என எண்ண வேண்டியுள்ளது என்று குறிப்பிட்டுள்ளார்.

" இப்பத்தினி கவிபாடும் ஆற்றல் பெற்றிருந்தாள் என்றும் எண்ணவேண்டியிருக்கிறது. யாப்பருங்கல விருத்தியுரை ஆசிரியர், "**பத்தினிச் செய்யுள்**" இது என்று இரண்டோரிடங்களில் சுட்டிக் காட்டுதலும், 'பத்தினி' என்னும் சொல்வழக்கு இன்றளவும் கண்ணகியையே குறித்து வருதலாலும் அச்செய்யுட்கள் இப்பெண் தெய்வத்தால் பாடப் பெற்றனவே என்று துணிதலில் ஐயமில்லை."

பேராசிரியர் கூறும் இக்கருத்து ஆய்வுக்குரியது.

இனி, கண்ணகியை மருதன் இளநாகனர் என்னும் புலவர் **நற்றிணையில்,**

" எரிமருள் **வேங்கைக்** கடவுள் காக்கும்
குருகார் கழனியின் இதயத் தாங்கண்
ஏதி லாளன் கவலை கவற்ற
**ஒருமுலை அறுத்த திருமா வுண்ணி"** (நற்றிணை, 216)

என்று புகழ்ந்துள்ளார். "திருமாவுண்ணி" என்று கூறப்படுதலாலும், 'ஒரு முலை அறுத்த' என்று கூறப்படுவதாலும், இங்குப் புலவரால் குறிக்கப்படுபவள் கண்ணகியே எனக்கொள்வது பொருந்தும். "**திருமாமணி**" (வேட்டுவ வரி, 50) எனவும், "திருமா பத்தினி" (கட்டுரை, 14) எனவும் வருவன கண்ணகியைக் குறிப்பதைக் காண்க.

'பத்தினி' என்னும் சொல் இன்றளவும் கண்ணகியையே குறித்து வழங்குகின்றது. "இவள் பத்தினியோ, சொன்னல் பலித்திட" என்று கூறுவதிலிருந்து, கண்ணகிதான் இங்குக் குறிப்பிடப்படும் பத்தினி என்பதையும், அவள் சொன்ன செயல்களைச் செய்து முடித்தவள் என்பதையும் இத்தொடரால் நாம் நன்கு அறியலாம்.

# 7. கோவலன் இன்ப விழைவு

மனிதன் குறைகள் உடையவனுகவே காணப்படுகிருன். தன் குறைகளை உணர்ந்து திருந்திக்கொள்ளுபவனே மனிதருள் சிறந்தவனுகக் கருதப்படுவான். அவனையே வாழ்வாங்கு வாழ்ந்தவனுகக் கருத முடியும். வாழ்வாங்கு வாழும் தன்மை பெற்ருேர் மிகச் சிலராகவே உள்ளனர் என்பதை உள்ளிருத்தி, அத்தகையோர் பலராகப் பெருகுதல் வேண்டும் என்னும் ஆர்வம்கொண்டே வள்ளுவர்,

“ வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.”

என்று கூறினுரோ என்ற எண்ணம் உண்டாகின்றது. நல்லதொருசெயல் செய்யப்படவேண்டுமாயின், அதற்குப் பலவித முயற்சிகள் தேவைப்படுகின்றன. பிறருடைய பாராட்டுதலுக்கு ஆளாகவேண்டும் என்ற எண்ணம் அல்லது விருப்பம் யாவர்க்கும் உரியது. அதனுற்போலும், தெய்வத்துள் சேர்த்துப் போற்றப்படும் நிலையினை வாழ்வாங்கு வாழ்பவரே பெறக்கூடும் என்று வள்ளுவர் குறித்தார்.

உலகவரால் போற்றப்படும் காந்தியடிகள் மனிதருள் ஒருவராகவே பிறந்தார். தொடக்கத்தில் அவர் புலால்உண்டதும், லாகிரிப்பொருள்களைப்பயன்படுத்தி

யதும், நண்பர்களுடன் சேர்ந்து அவர்களின் தீய உற வால் பொருளைக் களவாடியதும் அவர் செய்த குற்றங் கள். ஆயின், அவர் தாம் செய்த தவறுகளை எண்ணி வருந்தினர். அவரவர்கள் தாங்கள் செய்யும் தவறுகளை எண்ணுவதும் வருந்துவதும் இயல்பே. ஆனால் காந்தி யடிகள் தாம் செய்த தவற்றை எண்ணுவதுட னும் வருந்துவதுடனும் நில்லாது திருந்தலானர். அவர் வாழ்க்கையில் ஏற்பட்ட வெற்றிக்குத் **திருந்தும் மனமே** காரணமாய் அமைந்தது என்று கூறலாம். இவ்வாறே உயர்நிலை அடைந்த ஒவ்வொருவர் வாழ்க் கையிலும் சில நிகழ்ச்சிகள் இடம் பெற்றிருக்கும். உயர்ந்தோர் வாழ்வுப் பாதையின் தொடக்கப் பகு தியை நாம் எண்ணிப் பார்த்தால், அப்பெரு மக்களின் திருந்தும் ஆர்வத்தையும், உறுதி மனத்தையும் அறிய லாம்; அவர்களின் உலகறிந்த பெருவாழ்வுக்கு அடிப் படையாக அந்த ஆர்வமும் மனத்திட்பமும் வழி வகுத்த தையும் அறியலாம்.

சிலப்பதிகாரக் காப்பிய மாந்தர்களாகக் கண்ணகி, மாதவி, கோவலன் ஆகியோர் உள்ளனர். இவருள் ஒவ்வொருவரும் சில குறைகளைக் கொண்டே இயங்கு கின்றனர். குறைகளை உணர்ந்த காரணத்தாலும் உணர்ந்து தம் போக்கையே மாற்றிக்கொண்ட கார ணத்தாலும் கண்ணகியும் மாதவியும் உயர்வடைந்த னர். குறைகளை எண்ணியதுடன் நின்று, தடுமாறும் உளங்கொண்ட கோவலன், கண்ணகி—மாதவி போல உயர்வடைய முடியவில்லை. கோவலனுடைய பண்பு நலன்களை இக்கட்டுரையில் காண்போம் :

ஆசிரியர் நூலின் தொடக்கத்தில் திருமணத்தில் தமது காப்பிய மாந்தரான கண்ணகியையும் கோவலனை

யும் அறிமுகப்படுத்துகின்ருர். கண்ணகியை முதலாவதாக அறிமுகப்படுத்தும் அவர், அவளுடைய அழகைப் போற்றுவதுடன், வடமீன் போன்ற கற்புத் திறத்தையும், தொழத்தக்க குணப் பெருமையையும் கூறுகின்ருர். அவரே கோவலனைப்பற்றி அறிமுகப்படுத்தும்போது, அவனுடைய பண்பைப் பற்றிக் கண்ணகியைக் குறித்தாற்போலச் சிறப்பாக எதுவும் கூருமல், அவனுடைய அழகையும் புகழையுமே பாராட்டிக் கூறுகின்ருர். ஆடவர்கள் அவனைப் பாராட்டினர் என்று கூருமல், பெண்டிர் அவனைப் பாராட்டிப் புகழ்ந்தனர் என்கிருர்; இதில் மற்றையோரினும் கோவலன் மாறுபட்டவன் என்பதையும், கோவலனின் முறையற்ற செய்கைகளால்தான் அழிவுகள் அடுத்துவரக் காத்திருக்கின்றன என்பதையும் நாம் எண்ணிப் பார்க்கத் துணை செய்கின்ருர்.

"மண்தேய்த்த புகழினன் மதிமுக மடவார்தம்
பண்தேய்த்த மொழியினர் ஆயத்துப் பாராட்டிக்
கண்டேத்தும் செவ்வேள்என்று இசைபோக்கிக் காதலால்
கொண்டேத்தும் கிழமையான் கோவலன்என் பான்மன்னே"
—(மங்கலவாழ்த்து, வரி 36-39)

ஆசிரியர் கோவலனை அறிமுகப்படுத்தும் முறை இதுதான். புகழைத் தவிர வேறு பாராட்டக் கூடிய பொறுமை, ஆய்ந்துணரும் தன்மை, எதுவும் அவனிடம் இல்லை என்பதை, நாம் இந்த அறிமுகத்தாலேயே தெரிந்துகொள்ளும்படி செய்துவிடுகின்ருர். இங்ஙனம் கோவலனுடைய பண்புகளைக் கூறுதுவிட்டதுடன் நில்லாது, ஆசிரியர், "காவிரிப்பூம் பட்டினத்துத் தெருக்களில் தென்றல் வீசியது. ஓரிடத்தும் நில்லாது அசைந்தாடிய அத்தென்றல் சிறு தெருக்களில் எல்லாம்

நுழைந்தது ; மல்லிகை, முல்லை, குவளை, மாதவி இவற்றின் மணங்களை உண்டது ; நாளங்காடியில் விற்பனையாகும் பூக்குவியல்களின் மணத்தை உண்டது ; நகையாடி மலர்ந்திருக்கும் பெண்களின் கூட்டத்துள் புகுந்து அவர்களுடைய மொழிகளை நுகர்ந்தது ; நிலையற்ற இத்தென்றல் வேடிக்கை விளையாட்டில் காலம் கழித்து யாழிசைக்கும் பாணரோடும் நகரத்துக் காமுகரோடும் சேர்ந்து திரியும் **கோவலனைப் போல்** அசைந்து திரிந்தது,'' என்று கோவலனைத் தென்றலுக்கு உவமை கூறி, அவனுடைய ஒழுக்கத்தைப் பழிக்கின்றார்.

> " நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
> குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
> திரிதரு மரபிற் **கோவலன் போல**
> இளிவாய் வண்டினோ டின்னிள வேனிலொடு
> மலய மாருதம் திரிதரும் மறுகு''
>
> —(இந்திரவிழவூரெடுத்த காதை, வரி 199-203)

கோவலன் நிலையில்லாத மனங்கொண்டிருந்தான். ஒரு நாள் மாதவியிடம் சென்று விடுதலறியா விருப்புடன் இருந்தவன், அவளை வெறுத்து மறக்கும் நிலைக்கு வந்து விட்டான். இந்த நிலைக்கு அவன் வந்துற்றமைக்கு அவனிடம் இயல்பாயமைந்துவிட்ட **நிலையற்ற மனமே காரணம்** என்று கொள்ளலாம்.

கோவலன் கண்ணகியுடன் இல்லறம் புகுந்த தொடக்க நிலையில் அவளை அன்புடன் பாராட்டினன். அவன் புகழுரையினைப் படிக்கும்பொழுது நமக்கு அவர்கள் வாழ்க்கை இன்பமாக அமைந்துவிடும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனல்அவளை விட்டு அவன் விரைவில் பிரிந்துவிடுகிருன். இந்தப் பிரிவுக்குக் காரணம் யாது ?

கோவலன் அவளைப் பலபடப் பாராட்டிய பொழுது அவள் மறுமொழி ஏதும் கூறவில்லை. அவன் அவளுடன் வாழ்ந்த காலத்தில் அவள் தன்னோடு பொழுது போக்குவதைவிட அறச்செயல்களைச் செய்வதிலேயே மிகுந்த கவனத்தைச் செலுத்தியதைக் கண்டிருக்கவேண்டும். அத்துடன் இன்ப நிகழ்ச்சியில் அவளுக்குத் தன்னைப்போல் ஈடுபாடு இல்லை என்றும் அவன் எண்ணியிருக்கவேண்டும். எனவேதான் இடையீடற்ற இன்பத்தை வேண்டி நின்றவன் கண்ணகியின் அந்தப் புறக்கணிப்பால் பெரிதும் வருந்தியிருக்கக் கூடும். கோவலன் காமநுகர்ச்சி மிக்குடையவன் என்பதை ஊடல்கோலமோடு அவன் இருந்த போதெல்லாம், மாதவி, கூடல் முதலில் தந்து பின்னரே ஊடல் போக்கியதாக ஆசிரியர் குறிப்பிடுவதால் அறியலாம். அந்த எண்ணமே அவனுக்கு மிக்கிருந்த காரணத்தால் தான் மாதவி தன் கலையை வளர்த்துக்கொண்டதை வெறுக்கத்தொடங்கி, அவளிடம் ஐயங்கொண்டு, இறுதியில் அவளை, "மாயப்பொய் பலகூட்டும் மாயத் தாள்" என்று கூறும் நிலைக்கு வந்துவிட்டான். எனவே, கோவலன் கண்ணகியைப் பிரிந்தமைக்கு அவனிடம் இன்பம் நுகரும் விழைவு மிக்கிருந்தமையே காரணம் என்று கூறலாம்.

இதனை உறுதிப்படுத்திக்கொள்ளக் கோவலன் மாதவியின் உறவுபெற்ற தொடக்க நிலையைக் காண்போம்:

செல்வக் குடிப்பிறந்த இளைஞர்கள் மாலைக்காலங்களில் நகரத் தெருக்களில் உலாப்போதல் அக்கால வழக்கம். அவ்வாறு செல்லுங்கால் அவன் உள்ளம் அழகிய பரத்தையரிடம் பதிந்திருத்தல் வேண்டும். அவன்

பரத்தையர் விருப்பனாகப் பாணர் முதலானாரோடு திரிந்தான் என்று ஆசிரியர் குறிப்பிடுகின்றார். இந்திர விழவூரெடுத்த காதையில் ஆசிரியர் கோவலனைத் தென்றலுக்கு உவமித்துக் கூறியதை முன்னர்க் கண்டோம். அந்தப் பகுதிக்கு உரையெழுதிய நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், "அடிகள் இவ்வுவமவாயிலாகக் காமத்தால் கோவலன் எய்திய சிறுமையை அங்கை நெல்லிக்கனி என விளக்கியுள்ளார்," என்று குறிப்பிட்டுள்ளமையும், கோவலன் இன்ப நிகழ்ச்சி விழைவை விளக்கத் துணை புரியும். இவன் இன்ப நுகர்ச்சியின் விழைவை அறிந்ததால்தான் மாதவி இவன் மனம் மகிழும் நிலையில் தன் தலை நீராட்டி, மான்மதச் சேறாட்டிக் கால்விரல் முதல் கூந்தல் ஈறாக அணியத்தகுவன அணிந்து கூடல் நல்கினாள் என்று குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.

இனி, கோவலன் கண்ணகியைப் பாராட்டிய உரையும் சாதாரணமாக மணமானவுடன் முதல் சந்திப்பில் காணும் கணவன்-மனைவி பேசும் பேச்சாகவே உள்ளது. அவளைப்பற்றி அவன் புகழும் உரைகள் யாவும் அவனுடைய மனக் கருத்தையும் ஆர்வத்தையும் புலப்படுத்துகின்றன. ஆசிரியர் தம் காப்பியத் தலைவனை இவ்வாறு படைப்பாரோ எனின், அவர் கண்ணகியைத் தெய்வமாக்கி வழிபடச் செய்ய வேண்டும் என்ற தம் குறிக்கோளிலேயே பெரிதும் ஈடுபட்டுக் கோவலன் வாழ்வில் திருந்துவதே கண்ணகியால்தான் என்பதைக் காட்டவிழைந்து, அவள் கணவன்கோவலன் என்பதாலேயே அவன் சிறப்புப் பெறுகிறான் என்பதையும் நாம் எண்ணச் செய்கிறார்.

தனக்கு உகந்த முறையில் கண்ணகி இன்பம் தரத் தக்கவள் அல்லள் என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் ஆட்சி செய்திருந்தபோதுதான், மாதவியின் மாலையை விலைகூறி நின்ற கூனியைக் கண்டிருக்கவேண்டும். நகர நம்பியர் திரிதருமறுகில் நின்று மாலையை விலை கூறிய கூனியைக் கண்ட கோவலன், தன் விழைவு ஈடேறுவதற்குரிய நல்ல வாய்ப்புக் கிடைத்தது என்று எண்ணி, மாலையை வாங்கி மாதவி மனை சென்றவனாதல் வேண்டும். அறத்துறையிலேயே பெரும் பொழுதைக் கழிக்கும் கண்ணகிக்குத் தன்னைப்போலக் காம நுகர்ச்சியில் ஈடுபாடில்லை என்று கருதியதால்தான் கண்ணகியைப் பற்றிக் கவலைப்படாமல், அவளும் தன் பிரிவைப் பற்றித் துயர் கொள்ளாள் என எண்ணி, கோவலன் மாதவியுடன் தங்கிவிட்டான். கோவலன் கண்ணகியைப் பிரிந்ததற்கு இடையீடற்ற இன்பம் பெற வேண்டுமென்ற விழைவுதான் காரணமாக இருத்தல் வேண்டும் என்று கருதுதல் தவறாகாது.

இடையீடற்ற இன்பத்தை விரும்பி நைந்த கோவலன், மாதவியின் உறவைப்பெற்ற பின்பும் இன்பமாக வாழவில்லை. மாதவியும் கோவலனை மகிழ்விப்பது ஒன்றிலேயே தன் கருத்தைச் செலுத்தவில்லை. அவள் தன் கலையை வளர்த்துக்கொள்ளுவதில் ஆர்வம் செலுத்தினாள். இந்திரவிழாவின்போது அவள் ஆடலில் காலத்தைச் செலவிட்டது கோவலனுக்கு மனக்கசப்பை அளித்தது. அந்த மனக்கசப்பு மாதவியின் கடற்கரைப் பாடலைக் கேட்டதும் மனமாற்றமாகிவிட்டது. அவன் மாதவியை விட்டுப் பிரிந்தான்.

கண்ணகியை விட்டுப்பிரிந்த கோவலன், மாதவியையும் விட்டுப் பிரிந்தான். இந்த இரண்டு பிரிவு

களுக்கும் அவனே பொறுப்பாளியாவதை நாம் அறிதல் வேண்டும். கண்ணகியைப் பிரிந்தமைக்கு அவன் வேட்கை காரணமாய் அமைந்தது. மாதவியைப் பிரிந்த தற்கு அவன் மனநிறைவின்மை காரணமாயமைந்தது. கண்ணகியிடம் மாதவியைச் 'சலம்புணர்க் கொள்கைச் சலதி' என்று குறிப்பிட்டவன், மாதவியின் கடிதத் துடன் வந்த கோசிகனைக் கண்டு, 'மாதவி குற்றமற்ற வள்' என்று கூறினன். கனாத்திறமுரைத்த காதை யில் கண்ணகியிடம் அவளை (கண்ணகியை) விட்டுப் பிரிந்தது தன்குறையே என்று கூறிய கோவலன், கோசிகனிடம் மாதவியை விட்டுப் பிரிந்தது தன் குறையே என்று கூறுகின்றான். இதனால் இவ்விரு பிரிவுகளுக்கும் அவனே பொறுப்பாளியாவது வெளிப் படை.

கோவலன் இவ்வாறு இன்பம் கருதி மாதவியை, மனைவி யிருக்க அடைந்தது முறையா எனின், அக் காலச் சமுதாயம் இச் செயல் முறைகளை ஏற்றுப் போற்றியதாகக் கூறவேண்டும். பரத்தையர் குலம் என்று தனியே பொதுமகளிரைப் போற்றி வளர்த் தது அக்காலச் சமுதாயம். 'கற்பு' பொதுமகளிர்க்கு வேண்டாததாயிருந்தது. ஆண்களுக்கும் கற்பு வற் புறுத்தப்படவில்லை. செல்வக் குடும்பத்தில் பிறந்த வர்கள் செல்வம் கொண்டு பரத்தையரை எளிதில் உறவுகொள்ள முடிந்தது. கோவலன் இந்தச் சமுதாயச் சூழலில் சிக்கினன். எனவே, புகார் நகரில் செல்வ வளம் மிக்க குடிப் பிறந்த கோவலன், தன் இன்பங் காரணமாக மாதவியை நாடியதில் வியப்பில்லை.

கோவலன் தன் வாழ்க்கையில் இடையீடற்ற இன்பமொன்றையே கருதினன் ஆதலால், அவன்,

அதற்குத் தடையாகச் சிறியதொரு நிகழ்ச்சி நடைபெறுமாயினும், அதனைப் பெரிதாக்கி மனங்குழம்பினன். அதனுல் கானல் வரிப்பாட்டுப் பாடியபோது, தனக்கிருக்கும் உரிமை மாதவிக்கும் இருக்கும் என்று எண்ணுமல், அவள் பாடியதையும் முன்பு அவள்பால் தனக்கு இருந்த வெறுப்புணர்ச்சியையும் துணையாகக் கொண்டு அவளைப் பிரிந்தான். கானல்வரி பாடுகையில் கோவலனுக்கிருந்த மனநிலையைப் பற்றிய விரிவான செய்திகளைக், "கடற்கரையில் கோவலன்" என்னும் கட்டுரையில் காண்போம்.

# 8. கோவலன்—மனப்போக்கு

கோவலனுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட தோல்விக்கு அவனது நிலையற்ற மனமே காரணம் என்று சொல்லலாம். கடற்கரையில் மாதவியும் கோவலனும் பொழுதைக் கழிக்க இசைபாட முயன்றனர். அந்தக் கடற்கரைப் பாடலின் முடிவில்தான் கோவலன் மாதவியிடம் வெறுப்புற்றுப் பிரிந்தான். கோவலன் மாதவியிடம் வெறுப்புக் கொண்டமைக்குக் கீழ்வரும் இரண்டு காரணங்களைக் கூறலாம்: மாதவி இந்திர விழாவின்போது பலர் வியந்து பாராட்டப் பலர் முன்னிலையில் நடனமாடியது முதற் காரணம். அவன் அவளால்தான் வறுமையுற்றதாக நினைத்த எண்ணம் இரண்டாம் காரணம். முன்னைய காரணத்தை விடப் பின்னைய காரணமே அவனைப் பெரிதும் வாட்டத் தொடங்கியது. பொருளெல்லாம் இழந்த நிலையில் கோவலன் இருந்தனன். பொருளற்ற நிலையில் உள்ள தன்னை இனி மாதவி விரும்புவாளா என்று அவன் ஐயம் கொண்டான். இக்குறை அவன் உள்ளத்தில் இடம்பெற்ற பின்புதான் இந்திர விழாவின் போது, மாதவி பலர்முன் நடனமாடி மகிழ்வித்ததைக் கண்டான்; அவள் மற்றவர்மீது கருத்துக் கொண்டாளோ என்று ஐயமுற்றான்; அதனால் அவளை வெறுத்தான்; ஐயத்தையும் வெறுப்பையும் வளர்த்துக் கொண்

டான். கடற்கரை நிகழ்ச்சி அதற்குத் துணையாயமைந்து விட்டது. மாதவியிடம் கோவலன் ஐயமும் வெறுப்பும் கொண்டான் என்றாலும், மாதவி குறையுடையவள் அல்லள் என்பதையும், கோவலனுடைய ஐயத்துக்கும் வெறுப்புக்கும் மாதவி எந்த விதத்திலும் பொறுப்பாகாள் என்பதையும் " **கலையும் வாழ்வும்** " என்னும் கட்டுரையில் காண்போம்.

மாதவியிடம் கடற்கரையில் வெறுப்புக்கொண்டு பிரிந்த கோவலன் நேராகக் கண்ணகி மனைக்குச் சென்றதாக ஆசிரியர் குறிப்பிடவில்லை. தனக்கு உண்டான வறிய நிலையை எண்ணியவுடனே அவனுக்குக் கண்ணகியின் நினைவு வந்துவிட்டது. மாதவியை விட்டுப் பிரிந்து கண்ணகியை அடையவேண்டும் என்று அவன் எண்ணியிருக்கமாட்டான். என்றாலும், அத்தகைய வாய்ப்பு நேரக்கூடும் என்றேனும் அவன் மாதவியின் பாடலைக் கேட்டபோது எண்ணியிருக்க வேண்டும். அவ்வாறான எண்ணங் கொண்டவன் மாதவியின் பாடல் முடிந்ததும், "மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள்" என்று அவளைப் பழித்துவிட்டுத் தனியாகப் புறப்படுகிறான்.

கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து சென்றான் என்று கூறும் ஆசிரியர், நாம் அடுத்து அவனைக் கூல மறுகில் காணுமாறு செய்து விடுகின்றார். மிக்க ஆத்திரத்துடன் வேகமாகச் சென்றவன் கடைவீதியில் காணப்படுகின்றான். கோவலன் தன்னை எழுமாறு கூறாமல் வழக்கத்துக்கு மாறாகச் சென்றதைக் கண்டு வருந்தியவளாய் மாதவி தன் இல்லம் சென்று, கோவலன் இல்லாதது கண்டு வருந்தினாள். தன் துயரை மறைக்க அவள் பல முறைகளைக் கையாண்டும் தோல்

வியே கண்டாள். இறுதியில் கோவலனை வரவழைக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் கடிதம் ஒன்றை எழுதி, அதனை வயந்த மாலையிடம் தந்தனுப்பினாள். வயந்த மாலை அந்தக் கடிதத்துடன் சென்று கோவலனைக் கடைத்தெருவில் கண்டு தந்தாள் என்று கூறுகின்றார் ஆசிரியர். கோவலன் கடைத் தெருவில் இருக்கக் காரணம் என்ன என்பதைக் காண முற்படுவோம் :

கோவலன் மாதவியிடம் ஐயங் கொண்டான். ஆனால் அவளை வெறுக்க அவன் மனம் இடந்தரவில்லை. தான் உவக்கும் அளவில் ஆடை அணிகளை அணிந்து இன்னிசை எழுப்பிய அவளை அவனால் மறக்கவே முடியவில்லை. அதனாற்றான் அவன் அவளை விட்டு மிகுந்த சீற்றத்துடன் புறப்பட்டும், கடைத் தெருவில் நின்று மேலும் செல்லுதலைத் தவிர்த்தான். அவன் மனம் மாதவியைப்பற்றி எண்ணியிருக்கக்கூடும். தன் வறுமைக் குறையும் இன்ப விழைவும் போட்டியிட, ஒன்றும் விளக்கமுறாத நிலையில்—மனம் குழம்பிய நிலையில் இருந்தான் என்று நினைக்கலாம். இதற்கு அவனுக்கிருந்த **உறுதியில்லா மனமே காரணமா**கும் என்று சொல்லலாம்.

இந்த நிலையில்தான் வசந்தமாலை மாதவியின் கடிதத்துடன் அவன்முன் வந்தாள். மாதவியின் கடிதத்தைக் கண்டதும் கோவலன் சினம் கொண்டான். முன்னரே அவன் மனம் வெறுப்பு விருப்பு என்ற இரண்டுக்கும் இடைப்பட்டுப் போராடியது என்று சொன்னோம் அல்லவா? வெறுப்பு விருப்பு என்ற இரண்டில் வெறுப்பே சிறப்பிடம் பெற்றிருந்தமையால், கோவலனுக்கு மாதவியின் கடிதம் கோபத்தைத் தந்ததில் வியப்பில்லை. உடனே அவன் மாதவி தன்னு

டன் கூடியும், ஊடியும் செய்த வித்தைகளைப் பழித் தான்; அவளுடைய செய்கைகளையெல்லாம் எட்டு வகை வரிக் கூத்தாக எடுத்துக் காட்டினான். நாம் அவற்றை இங்குக் காண்போம். கோவலன் மாதவி யைப் பழித்துக் கூறும் இப்பகுதி அவனுடைய அலை யும் மனத்தை நன்கு விளக்குகின்றது.

நாடக உறுப்பில் எட்டுவகையான வரிக்கூத்து உண்டு. 'வரி' என்பது அவரவர் பிறந்த நிலத்தின் தன் மையும், ஏற்ற தொழிலின் தன்மையும் தோன்றும்படி நடிப்பது. கண்கூடுவரி, காண்வரி, உள்வரி, புறவரி, கிளர்வரி, தேர்ச்சிவரி, காட்சிவரி, எடுத்துக்கோள் வரி, என்ற எட்டு வரிகளில் கோவலன் மாதவியைப் பழிக் கின்றான். மாதவி பரத்தையர் மரபினள் ஆதலாலும் நடனத் தேர்ச்சி பெற்றவள் ஆதலாலும் அவளுடைய பிறப்பிற் கேற்பத் தன்னிடம் பொய்யாய் நடந்து கொண்டாள் என்னும் கருத்தோடு அவளுடைய செய்கைகளைப் பழிக்கத் தொடங்கினான்.

1. "நெற்றிப் பொட்டும், கூந்தலும், வில்லொத்த புருவமும் குவளைப் பூப் போன்ற விழிகளும், குமிழம் பூ ஒத்த மூக்கும், கொவ்வைப் பழம் போன்ற வாயினையு முடைய அவள் (மாதவி) என்னிடத்து உண்மையான அன்புடையவள் போல முகபாவனை செய்து ஏமாற் றிய **கண்கூடுவரியை** நான் அறிவேன்."

2. "அவளுடைய கூந்தல் மேகத்தைப் போன் றது. கயல் மீன்கள் போன்ற அவள் கண்கள் நிலவை ஒத்த முகத்தில் உலவித் திரிவது போலிருக் கும். முகப் பொலிவோடு பவளம் போன்ற வாயைத் திறந்து, முத்தைப் போன்ற பற்களால் புன்முறுவ லாகிய இன்பத்தை எனக்குத் தந்தாள். நான் 'வா'

என்று 'சொல்லும்போது வந்தாள்; 'போ' என்று சொன்னால் போனாள். இவ்வாறெல்லாம் அவள் என் முன் நடித்த **காண்வரிக்** கோலத்தைக் கண்டிருக் கிறேன்."

3. " அந்திப் பொழுதில் காதல் மிகுதியால் எனக்கு உண்டாகும் ஆற்றாமையைப் பார்க்கும்போது, அவள் தன் அன்ன நடையையும் மயிலின் சாயலையும் மறைத்து ஏவற் பெண்ணின் கோலத்தோடு என்முன் **பாசாங்கு செய்து நடித்த உள்வரியாடலை** நான் அறிவேன்."

4. " சில சமயங்களில் அவள் **பிரிவாற்றாமையால்** நான் வருந்திக்கொண்டிருக்கும் பொழுது, சிலம்பின் வாய் ஒலிக்கவும், மேகலை ஆர்ப்பவும், காதல் மிகுந்த நோக்கத்தோடு என்முன் வந்து என்னைக் **கூடாமல்** புறத்தே நின்று நடித்துவிட்டுப் போவாள். இந்தப் **புறவரி** எனக்குத் தெரியாதா?"

5. " மாலைகள் அணிந்துகொண்டு கூந்தலைப் பல விதமாய் முடித்து முத்துவடம் அணிந்து மின்னற் கொடி போன்ற இடையை அசைத்துக்கொண்டு என் இருப்பிடம் வருவாள். உள்ளே வராமல் ஏவற் பெண்டிரிடம் தான் வந்திருக்கும் செய்தியைச் சொல்லுவாள். நான் ஊடலோடு புணர்ச்சிக் கருத் துடன் சொன்ன பதிலை, வேண்டுமென்றே மனம் வேறுபட்டுச் சொன்னதாகக் கொண்டு சினம் பொங்கி ஊடலால் மாறுபட்டவள் போல நடித்துப் போய் விடுவாள். இந்தக் **கிளர்வரிக்** கோலம் எனக்குத் தெரியும்."

6. " நான் அவளைப் பிரிந்திருந்த காலங்களில் மிக வும் வருந்தியவள் போல் என் சுற்றத்தாரிடம் தன்

வருத்தத்தைச் சொல்லிச் சொல்லி முறையிடுவாள். இது நடிப்பு என்னும் **தோர்ச்சிவரிக்** கோலம் என்று நான் அறிந்திருக்கின்றேன்.''

7. "மாலைக்காலத்தில் மயக்கமடைந்தவள் போல் பார்த்தவரிடமெல்லாம் முறையிட்டாள். அந்தக் **காட்சி வரியும்** நான் அறிவேன்.''

8. "அவர்கள் தன்னை எடுத்தணைத்து ஆறுதல் சொல்லவேண்டு மென்று, அவள் என் முன்னால் மேலும் மயங்கி விழுகின்றவள் போல் நடித்த **எடுத்துக்கோள் வரியும்** எனக்குத் தெரியும்.''

"வசந்த மாலையே, மாதவி ஒரு **நாடகப் பெண்.** ஆதலால் இப்படி யெல்லாம் நடிப்பது அவள் **இயல்பா**யிற்று,''

என்று கூறிக் கடிதத்தைப்பெற மறுத்தான்.''*

மாதவியிடமே மீண்டும் சென்றுவிடுவோமா என்று எண்ணிக் கடைத் தெருவிலேயே உலவிக் கொண்டிருந்த கோவலன், எண்ணத்துக்கு ஒரு முடிவிடுவது போல வசந்தமாலை மாதவியின் கடிதத்துடன் அங்குத் தோன்றினாள். அவளைக் கண்டதும் கோவலனுக்கு வெறுப்புணர்ச்சி மிகுந்துவிட்டது. மிகச் சிறிய நிகழ்ச்சிகளை எல்லாம் அவன் பெரிதாகக் கொண்டு உளங்கலங்குபவன் என்பது தெரிகின்றது. எனவே, மாதவியைப் பல கூறிப் பழித்ததுடன் அவளுடைய கடிதத்தையும் பெற மறுத்தான். வசந்தமாலையிடம் மாதவிபற்றிக் கோவலன் கூறிய இந்த நீண்ட பகுதியின் மூலம் நாம் மாதவியிடம் அவன்

---

* சிலப்பதிகாரம், புகார்க் காண்டம், ஆர். கே. எஸ். உரை. பக். 235-36 ; வேனிற் காதை, வரி 74-110.

கொண்டிருந்த மன நிலையை நன்கு அறியலாம். அவன் எவ்வாறெல்லாம் அவள் அழகைச் சுவைத்தான் என்பதும், எப்போதும் இன்ப விழைவுடனேயே அவன் இருந்தான் என்பதும், மாதவி அவன் உணர்வைப் பெருகச் செய்து இன்பம் நல்கி வந்தாள் என்பதும் இதனால் நன்கு தெரிகிறது அன்றோ? தான் தனிமையிலிருந்து மாதவியின் உறவை வேண்டியபோதெல்லாம் அவள் தன்னை அலங்கரித்துக்கொண்டு வந்து நின்று மீண்டும் வாளா சென்று விடுவாள் என்று கூறும் கோவலனிடம் நமக்கு இரக்கம் உண்டாகின்றது. தன் உணர்வுக் கேற்பச் சில வேளைகளில் மாதவி இயைந்து நடவாதிருந்த போதெல்லாம் கோவலன் ஏமாற்றமும் வெறுப்பும் கொண்டிருந்தான் என்பதும் இதனால் புலப்படுகின்றது.

மாதவியைக் குறை கூறத் தொடங்கியவன், அவளை, "வண்டு அலர் கோதை" என்று கூறுகின்றான். இக்கூற்று அவன் அவளிடம் கொண்ட அழகு உணர்ச்சியைத் தெரிவிக்கின்றது. "மாலைகள் அணிந்துகொண்டு கூந்தலைப் பலவிதமாய் முடித்துக் கொண்டு, முத்து மாலையை மார்பில் அணிந்து, மின்னற்கொடி போன்ற இடையை அசைத்துக்கொண்டு என்னிடம் வருவாள். புணர்ச்சியை உட்பொருந்தியிருக்கிற எனது புலவிச் சொல்லைக்கேட்டு, தளர்ந்த மேனியினையும் அழகிய மெல்லிய கூந்தலையுமுடையவள், புலவியால் வேறுபட்டுப் போனவள் போலச் சென்றாள்," என்று அவன் கூறுவதை நோக்க, அவன் கண்ணகியிடம் வாழ்ந்ததைவிட மாதவியிடம் அதிக காலம் இன்பமாக வாழ்ந்ததன் காரணத்தை அறியலாம்.

மாதவியிடம் கோவலன் இவ்வாறு மனக்கசப்புக் கொண்டமைக்குக் காரணம் அப்போது அவள் அவனது விருப்பத்துக்கு உடனே இயையாமல் வேறுபட்டுச் சென்றமையே யாகும். இதனாலும் கோவலன் மனம் இடையற்ற இன்பத்தையே விரும்பியதென்பதும், அந்த இன்பத்துக்குத் தடையாக எந்தச் சிறு நிகழ்ச்சி நடைபெறுமாயினும் அவன் அதைப் பெரிதாக்கிக்கொண்டு வருந்துவான் என்பதும் தெரிகின்றன அல்லவா?

இதற்குப் பின்னர்க் கோவலனை நாம் கண்ணகி வீட்டில் காணுகின்றோம். கண்ணகியைக் கண்டவன் அவள் வாடிய மேனி குறித்து வருந்தியதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ஆனால் அம்மேனி இனி வாட்டங் கொள்ளத் தேவையில்லை யென்றோ, தான் இனி மாதவியிடம் செல்லப்போவதில்லை என்றோ அவன் கூறவில்லை. அதற்குப் பதிலாக மாதவியிடம் உறவு கொண்டதால் முன்னோர் சேர்த்து வைத்த பெரும் பொருட் குன்றத்தைத் தொலைத்த நிலை ஏற்பட்டு விட்டதென்றும், அச் செயல் தனக்கு நாணம் தருகின்றது என்றுமே அவன் கூறினான். இதனால் அவன் மன அடக்கம் இல்லாத நிலையில் **உணர்ச்சிக்கு முதலிடம் தந்து** வாழ்ந்த மனப்பான்மையை நாமறியலாம்.

கோவலன் மனம் எதிலும் சரிவர ஈடுபடாமல் அலைந்தது என்பதை மேலும் ஒரு நிகழ்ச்சியால் காணலாம் :

'சலம்புணர்க் கொள்கைச் சலதி' என்றும், 'மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள்' என்றும் மாதவியைப் பழித்தவன்—கண்ணகியுடன் கவுந்தியடிகளும் துணையாய் வர மதுரைப் பெருநகரை நோக்கிச் செல்லும் பொழுதும் மாதவியின் நினைவினை அவன் விடவில்லை

என்பதை நாம் உய்த்துணர வைக்கின்ருர் ஆசிரியர். இதனைக் கூறவந்த ஆசிரியர், கோவலன் காமுகன் என் பதை மறைமுகமாகக் கூறுகின்ருர். கோவலனை இவ் வாறு கூறுவதற்காகவே அவர் அங்கு மாதவியைப் புகழ்ந்துரைக்கின்ருர் என்று கொள்ளவும் இடம் உள் ளது. இவ்வாறுள்ள நிகழ்ச்சியொன்றைக் காண்க :

கவுந்தியடிகளும் கண்ணகியும் மதுரைக்குச் செல் லும் வழியில் நடை வருத்தத்தினுல் ஓரிடத்தில் ஓய்வு கொண்டனர். கோவலன் தனியே சிறிது தொலைவு நடந்து சென்று, அங்குள்ள பொய்கை ஒன்றில் நீர் பருக நின்ருன். அப்போது அக்காடுறை தெய்வம் ஒன்று காதல் மிகுதியால் கோவலனைக் **கூடக்** கருதி, **மாதவி மேல் கொண்ட** காதலால் நம்மேல் இவன் அன்பு கொள்வான் என்று எண்ணி, அவள் தோழியா கிய வசந்தமாலையின் வடிவினைக் கொண்டு, கொடி யொன்று காற்ருல் நடுக்கமுற்றது என்று நினைக்கும் படியாகக் கோவலனின் மலரடிகளில் வீழ்ந்து கண் ணீரை உகுத்தது என்று கூறுகின்ருர் அடியார்க்கு நல் லார். (காடுகாண் காதை, அடியார்க்கு நல்லார் உரை, வரி 171-175)

“ கானுறை தெய்வம் காதலிற் சென்று
நயந்த காதலின் நல்குவன் இவனென
வயந்த மாலை வடிவில் தோன்றிக்
கொடிநடுக் குற்றது போல ஆங்கவன்
அடிமுதல் வீழ்ந்தாங் கருங்கணீர் உகுத்து”
(காடுகாண் காதை, வரி 171-175)

வயந்தமாலையின் உருவத்தினைக் கானுறை தெய்வம் கொண்டதேன் என்பதற்கு, “வயந்தமாலையின் வடிவு கொள்ளின் (கோவலன்) **நல்குவன்** எனக் கருதி அவள்

வடிவுடன் தோன்றியென்க" என்று உரை கூறியுள்ளார் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள். இப் பெரியாரது உரையின் துணைகொண்டு, கோவலனது மனப்போக்கை நாம் உணரலாம். கோவலன்மாதவியை அடைவதற்கு முன்பு பரத்தையர் உறவைப் பெற்றவனுதல் வேண்டும் என்பதை நாம் முன்பு கண்டோம். பரத்தையர் கோவலனுடைய பேரெழிலைக் கண்டு அவனைக் கூடி மகிழ விரும்பினர் என்பது பொருந்தாக் கூற்ருகாது. எனவே, அவன் அவர்களின் உறவைக் கொண்டிருந்தான் என்பதை நன்கு கூறலாம். கானுறை தெய்வம் வயந்தமாலையின் வடிவங்கொண்டு கோவலனைக் கூடக் கருதியது என்பதால், அவனுடைய எழிலையும் மனப் போக்கையும் ஆசிரியர் உணர்த்துகின்ருர். ஆசிரியர் இப்பகுதியில் மாதவியை உயர்த்திக் கூறுகின்ருர் ; கோவலன் வந்திலன் எனக் கேட்டதும் அவள் செய்த செயல்களை நம் மனம் உருகும் நிலையில் கானுறை தேவதையின் மூலம் கூறுகின்ருர். மாதவியின் புகழைக் கூறும் ஆசிரியர் மறைமுகமாகக் கோவலனின் மனப் போக்கினை இடித்துக் கூறுகின்ருர். கோவலன் கானுறை தேவதை கூறியதை எல்லாம் முற்றும் கேட்டிருந்தான். அவள் அவன் காலடியில் விழுந்து கண்ணீர் உகுத்தபோதெல்லாம் அவன் அவளைப் பற்றி ஏதும் நினையாது, அவள் எழிலில் ஈடுபட்டு, அவளது இனிமையான குரலைக் கேட்டு மகிழ்ந்தான் என்று எண்ண இடமுள்ளது. அவள் பேசி முடித்து அவனுடைய கருத்தைக் கேட்டபோதுதான், "இந்த ஐவகைப்பட்ட சிலவாகிய கூந்தலையுடையாளின் **உண்மையை** நான் அறிவேன்," என்று சொல்லிக் கொற்றவை மந்திரம் கூறினன். அவள் பேசி முடியும்

வரை அவளைப் பற்றி அறிய அவன் முனையவில்லை. பேசி முடிந்தபோது, முன்பு தான் சந்தித்த மறையவன் கூறிய கூற்று நினைவுக்கு வரவே (இக்காட்டில் அறிவினை மயக்கும் தெய்வம் உண்டு என்பதுதான் மறையவன் கூறிய கூற்று), தன்முன் நின்று பேசிய அவள், மறையவன் கூறிய **தெய்வமாக** இருக்கக் கூடுமோ என ஐயம் கொண்டு, கொற்றவையின் மந்திரத்தைக் கூறினான். அந்த ஐயம் வரும் வரையில் கானுறை தெய்வத்தைக் கண்ட கோவலனுடைய மனம் அவனைக் கலக்கியது. அவன் எண்ணங்கள் அவனுக்கு மருட்சியை அளிக்கின்றன.

'இவளது உண்மை நிலையை நான் அறிவேன்', என்று அவன் கூறியது, அவன் மனம் அவளது பேரெழிலில் ஈடுபட்டது என்பதையும், அவனுக்கு இன்ப விழைவு மேலோங்கியிருந்ததையுமே குறிக்கின்றதெனக் கொள்ளுதல் தவறாகாது.

மாதவியின் இரண்டாம் கடிதத்தைக் கொண்டு கோவலனைக் காணத் தேடியலைந்த கோசிகன், ஓரிடத்திலிருந்த கோவலனைக் கண்டு, அவன் தளர்ச்சியையும் மெலிவையுங் கண்டு ஐயுற்று, அவன் கோவலன்தானா என்பதை உறுதிப்படுத்திக்கொள்ள ஒரு முறையைக் கையாண்டான்.

பசிய இலைகளையுடைய குருக்கத்தி படர்ந்த நிழலையுடைய இடத்தில் சேர்ந்து கோசிகன் என்ற அந்த மறையவன் கோவலன் செவியிற் படுமாறு,

"கோவலன் தன்னை விட்டுப் பிரிதலானே மிக்க துன்பத்தினை அடைந்த கரிய நெய்தல் மலர் போலும் நெடிய கண்களையுடைய **மாதவியைப் போல,** பொறுத்தற்கரிய வெம்மையினை உடைய வேனிற்

காலத்து வெயிலால் **மாதவியே**, நீ துன்பமுற்றனையோ!" என்றான்.

இது கேட்டதும் கோவலன், "நீ இங்குக் கூறிய இக்கூற்றுக்குப் பொருள் யாது?" என்று கேட்க, "கோவலன் தீங்கின்றியுள்ளான், அவனை அறிந்தேன்," எனக் கோசிகன் மகிழ்ந்தான்.

" கோவலன் பிரியக் கொடுந்துயர் எய்திய
மாமலர் நெடுங்கண் **மாதவி** போன்றிவ்
அருந்திறல் வேனிற் கலர்களைந் துடனே
வருந்தினை போலுநீ மாதவி யென்றோர்
பாசிலைக் குருகின் பந்தரிற் பொருந்திக்
கோசிக மாணி கூறக் கேட்டே,
" **யாதுநீ கூறிய** உரையீ திங்கெனத்
தீதிலன் கண்டேன் எனச்சென் றெய்தி"
(புறஞ்சேரியிறுத்த காதை, வரி 48-55)

இந்நிகழ்ச்சியால் நாம் கோவலனைப் பற்றிய சில செய்திகளை அறியலாம்: மாதவி என்ற பெயரைக் கேட்டதும், அவனையும் அறியாமல் அவனுக்கு உணர்ச்சி ஏற்படுவதை நாம் இங்கு அறிகிறோம். கோவலனைப் பிரிந்ததால் மாதவி அடைந்த துயரைக் கூறி மாதவிக் கொடியின் பிரிவுக்காக வருந்தும் கோசிகனின் உரையைக் கேட்ட கோவலன், உடனே அவ்விடத்தை விட்டு அகன்றிருக்கலாம்; அல்லது கோசிகனிடம் ஏதும் பேசாது மேலும் அவனுடைய செயல்களைக் கவனித்திருக்கலாம். இவ் விரண்டும் செய்யாமல், அவன் உடனே அவனை அணுகி, "யாது நீ கூறிய உரையீது இங்கு?" என்று கேட்கத் தொடங்கிவிட்டான். இந்த அவசர ஆர்வம், அவனது உணர்வு வேகத்தைக் காட்டுகின்றது. கோவலன் மாதவியை வெறுத்துப்

புறப்பட்டான் என்ருலும் அவளை மறக்கவே அவனல் முடியவில்லை என்பதும், அவளை அடிக்கடி நினைந்து வந்தான் என்பதும், அவளைப் பற்றிய செய்திகளை அறிய விரும்பினன் என்பதும், கூறுபவர் யாரென முதலில் அறிய விழையாமல் கூறுபவரின் கூற்று என்ன என்பதையே கண்டான் என்பதையும் நாம் உணரலாம். இவற்ருல் அவன் மாதவியிடம் வெறுப்புறவில்லை என்பதும், அவனிடமிருந்த தன்னம் பிக்கைக்குறையும் பொருளற்ற ஐயமுமே அப்பிரிவுக்குக் காரணமாய் அமைந்தன என்பதையும் நாம் உறுதி யாகக் கொள்ளலாம். இந்த எண்ணத்தை நாம் கொள்ளவேண்டுமென்று கருதியே போலும் ஆசிரியர், கானுறை தெய்வத்தின் வாயிலாகவும் கோசிகனின் வாயிலாகவும் கோவலனைப் பிரிந்த மாதவியின் நிலை யைக் கூறுகின்ருர். கோவலன் கோசிகன் பேச்சை ஆவலோடு கேட்டதை நோக்க, அவன் மாதவியை மறக்கவில்லை என்பது தெளிவாகிறதன்ருே ?

மாதவியை விட்டுப் புறப்பட்டதும், கூலமறுகில் மாதவியின் கடிதத்துடன் வந்து சேர்ந்த வயந்த மாலையைக் கடிதமும் வாங்காமல் வெறுத்துப் பேசிய கோவலன், கானுறை தேவதையின் உரையையும், கோசிகனின் உரையையும் ஆழ்ந்து கேட்கக் காண் கிருேம். இதனல் கோவலன் மனம் இன்ப அலை களால்—நினைவு அலைகளால் தாக்கப்பட்டுத் துயர் உற் றிருந்தது என்பது தெளிவாகிறதன்ருே? இத்துயர் அவனுக்கிருந்த காரணத்தாலேயே உடல் மெலிந்து உரு மாறியிருந்தான் எனக் கொள்ளலாம். "கோவல னுடைய உருவம் திரிந்தமைக்குக் காதலியோடு கான கம் போந்தமையும், உள்ளங் கலங்கியமையுங் கார

ணங்களாம்'' என்று நாட்டாரவர்கள் கூறுகின்றார்கள்.

கோவலனுடைய உள்ளம் மாதவியை மறக்க வில்லை என்பதையும், அவன் அவளை விட்டுப் பிரிந்தது முதல் அவளுடன் கூடி மகிழ்ந்த நாட்களையெல்லாம் நினைவு படுத்திக்கொண்டு உள்ளூர மகிழ்ந்தான் என் பதையும், அத்தகைய இன்ப நாட்களை இழக்கவேண் டிய நிலை வந்ததே என்று வருந்தியிருக்கக் கூடும் என் பதையும், அவளுடைய உருவத்தையும் அலங்காரத் தையும் மனமென்னும் திரையில் நினைவென்னும் துணைக் கருவியால் எழுதிப் பார்த்து இன்புற்றிருத்தல் கூடும் என்பதையும் கோவலனைப் பற்றிக் கூறுமிடங் களிலெல்லாம் நாம் உய்த்துணரச் செய்கின்றார் ஆசி ரியர்.

வயந்தமாலை தந்த கடிதத்தை வாங்க மறுத்த கோவலன், கோசிகன் தந்த கடிதத்தை வாங்கிக் கொண்டான். கடிதத்தைப் பெற்ற அவன் அதைப் பிரிக்காமலிருந்தான். மாதவி எழுதிய ஓலையின் மடிப்புப் புறத்தில் உள்ள பொறியின் மணமே அவனை அவ்வாறு செய்தது. தான் அவளோடு கூடி உறைந்த காலத்தில் பூசியபுனுகு நெய்யின் மணத்தினைச் செறிந்த நெருப்பையுடைய கூந்தலால் இட்ட மண் இலச்சினை **அறிவித்துக் காட்டியது.** ஆதலால் அம்முடங்கலைக் கையினின்றும் பிரிக்க அவனுக்கு மனம் வரவில்லை; பின்னர் மண்பொறியை விடுவித்துக் கடிதத்தைப் பிரித்துப் படிக்கலானான் என்கிறார் ஆசிரியர்.

"உடனுறை காலத் துரைத்தநெய் வாசம்
குறுநெறிக் கூந்தல் மண்பொறி உணர்த்திக்
காட்டிய தாதலிற் கைவிட லீயான்
ஏட்டகம் விரித்தாங் கெய்திய துணர்வோன்''

(புறஞ்சேரியிறுத்த காதை, வரி 83-86)

கோவலனுடைய இந்தச் செய்கையால் அவனுடைய சுவைமனப்பான்மையை நாம் உணர முடிகிறது. அவன் மிகச் சிறந்த கவிஞனாகவும் கலைஞனாகவும் விளங்கினன்.

இடையீடற்ற இன்பமொன்றையே கருதிய கோவலன், தொடக்கம் முதல் இறுதிவரை ஆராய்ந்து பாராமல், விருப்பு வெறுப்புகளுக்கு எளிதில் இரையாகி, அலையும் அமைதியற்ற மனத்தைக் கொண்டிருந்தான் என்பதை நாம் எளிதில் அறியலாம்.

# 9. கோவலன் நற்பண்புகள்

கோவலனுடைய இன்ப விழைவையும் மனப் போக்கையும் கண்ட நாம், அவனுடைய அலையும் மனத்தையும் இடையீடற்ற இன்ப விழைவினையும் அவனிடம் அமைந்த குறையாகக் குறிப்பிடலாம். இக் குறையினைத் தவிர, அவன் பெருவள்ளலாகவும் சிறந்த கலைஞனாகவும் சுவைஞனாகவும் விளங்கினான் என்பதை நாமறிதல் நல்லது. அவன் வாழ்க்கையின் வீழ்ச்சிக்கு அவனிடம் இயற்கையில் அமைந்த இக்குறையே காரணமாய் அமைந்தது என்றாலும், அவனுடைய வள்ளல் தன்மையும் கலைத்தன்மையும் இக்குறையைப் பெரிது படுத்தாது மறைக்கத் துணை புரிகின்றன.

> "உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்
> றீவார்மேல் நிற்கும் புகழ்"

என்பது குறள். ஒருவனது மனத்தூய்மை, சொல் இனிமை, செயல் அருமை ஆகிய பண்புகளைப் பலரும் பாராட்டுவதே புகழ் எனப்படும். ஒருவன் வாழும் போதும் இறந்த பின்பும் அவன் செய்த அருஞ்செயலைப் பாராட்டலே புகழ் என்று சொல்லப்படும். பிறர்க்குப் பயன்பட்டமையால் அவன் ஞானம் என்னும் நல்லறிவு பெற்று நல்வாழ்வு பெறுகின்றான். வாழுங்

காலத்து ஈந்து புகழுடைந்து உயிர்க்கு ஆக்கம் தேடிக் கொள்ளவேண்டும் என்பதை வற்புறுத்த,

" ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு."

என்றார் வள்ளுவர். உலகில் புகழுடையும் துறைகள் பலவாக உள்ளன. அவற்றுள் கல்வி, ஒழுக்கம், நல்லறிவு, சான்றாண்மை போன்ற துறைகள் சிலவாகும்.

உணவு கொடுத்துப் பசிப்பிணி மருத்துவனாய் வாழ்பவன் சிறந்த புகழைப் பெறுகிறான். அறிவாற்றல் மிகுந்த புலவர்கள் முடியுடை மூவேந்தர்களைக் கண்டு வணங்கிப் போற்றினராயினும், பாரிவள்ளலை அவன் அளித்தஉணவு உண்டு புகழ்ந்தனர் என்று அறிகிறோம். எனவே, உரையும் பாட்டும் ஆகிய இருவகைச் சிறப்புரைகளும் உணவளித்துக் காக்கும் உயர்நலமுடையானையே சாரும்.

இரக்கம், ஈகை என்ற இரண்டும் எப்பொழுது வெளிப்படும்? மனிதனது வளர்ச்சியின் போது அன்பு வுளர வளர, அறிவும் உடன் வளரவேண்டும். இவ்வாறு அன்பும் அறிவும் வளர்ச்சியடையும் போது முதுமையும் பிணியும் அச்சுறுத்த, மனம் செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை போன்றவற்றை எண்ணும். அப்போது அன்பும் அறிவும் தொழிற்பட்டு இரக்கமும் ஈகையும் தோன்றும் என்று பெரியோர் கூறுவர். எனவே, மனிதனாய்ப் பிறந்தவன் ஈதல் என்னும் பேரறத்தால் புகழாகிய நிலைத்த உடம்பினைப் பெறுதலைப் பிறவியின் குறிக்கோளாகக் கொள்ளவேண்டும்.

மனிதன் தன்னை அறியாமலே சில வேளைகளில் புகழ்தரும் செயல்களைச் செய்கின்றான். பெற்றவரால் வளர்க்கப்பட்டுத் தக்காரிடம் கல்வி பயின்றவன், கூட்டுறவால் அன்பு வளர்ச்சி பெறவேண்டுமென எண்ணி மணஞ் செய்துகொள்கிறான்; அன்பு துணை செய்ய இல்லற வாழ்வு தொடங்குபவன் உலகப் போக்கினை உணரத் தொடங்குகின்றான்; தனது நல் வாழ்வுக்கு இடையூறாக அமைவனவற்றைக் களைய முற்பட்டு வெற்றிகாண விரும்புகின்றான். தன்னைப் பிறர் புகழ வேண்டுமென்று விரும்பும் அவன், சமுதாயத்தில் உணவின்றி வாடுவோர்க்கு உணவளிக்க முற்படுகின்றான். இச்செயலுக்கு இரக்க உணர்வு காரணமாயமைகின்றது. என்றாலும் புகழுணர்ச்சியும் துணையாயுள்ளதென்றும் கூறவேண்டும். அன்பு வளர, ஈகை வளர்கின்றது. இவை இரண்டும் வளர, அருள் வளர்கின்றது. இங்கு நாம் அருளுக்கும் அன்புக்கும் உள்ள வேறுபாட்டை அறிதல் நல்லது. அன்பு என்பது தம்மைச் சூழ்ந்தவரிடத்து உண்டாகும் ஈடுபாட்டு உணர்ச்சி. அருள் என்பதோ தொடர்பில்லாரிடத்திலும் உண்டாகும் உணர்ச்சி. பின் உணர்ச்சிக்கு முன் உணர்ச்சியின் வளர்ச்சியே அடிப்படை என்னலாம். மனித வாழ்வில் மலர்கின்ற இயற்கையான வளர்ச்சி இதுவேயாகும்.

இந்தப் பண்புகளெல்லாம் கோவலனிடம் இருந்தன. தம்மைச் சூழ்ந்தாரிடத்து அன்பு செலுத்திய அவன், தம்மோடு தொடர்பில்லாப் பிறரிடத்திலும் அன்பு செலுத்தினான். உதவிக்குத் தக்காரா என்றும் பாராமல் அன்பும் அருளும் அடிப்படையாக உதவி செய்த புகழுடையவன் கோவலன்.

மாதவியிடம் தனக்குப் பிறந்த குழந்தைக்குத் தன் முன்னோர் ஒருவரைக் காப்பாற்றிய தெய்வத்தின் நினைவாக **மணிமேகலை** என்னும் பெயர் வைத்து, அந்நன்னாளில் மாதவியோடு இருந்து இரப்போர்க்குச் செம்பொன்மாரி வழங்கினான்.

" அணிமே கலையார் ஆயிரம் கணிகையர்
மணிமே கலையென வாழ்த்திய ஞான்று
மங்கல மடந்தை மாதவி தன்னொடு
**செம்பொன் மாரி** செய்கையின் பொழிய"
(அடைக்கலக்காதை, வரி 38-41)

கோவலன், கீரியைக் கொன்ற அந்தணன் மனைவியை அழைத்து அவள் பாவத்திற்குக் கழுவாயாகப் பலவகைத் தானம் செய்து, வடதிசை சென்ற அவள் கணவனையும் அழைத்து, அவர்கள் வாழ்வதற்கும் பொருள் கொடுத்தனுப்பினான்.

" தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானம் செய்தவள் தன்துயர் நீங்கிக்
கானகம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத்து உறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ"
—(அடைக்கலக்காதை, வரி 71-75)

பொய்ச்சான்று கூறிய ஒருவனைப் பூதம் கைப்பாசத்தால் இழுத்துக் கொல்லப்போனபோது, அவன் தாய் பட்ட துயரங் கண்டு இரங்கிக் கோவலன் அப்பூதத்திடம் சென்று, தன்னுயிர் கொண்டு அவனை விடுக்குமாறு வேண்டினன். அப்பூதம் அவன் வேண்டுகோளை மறுத்துவிடவே, கோவலன் அவன் தாய்க்கும் அவன் தொடர்புள்ள பிற சுற்றத்தார்க்கும் பசிப்பிணி யறுத்துப் பல்லாண்டு அவர்களைக் காப்பாற்றினான். இவ்வாறு

கோவலன் பலவகை அறச்செயல்கள் செய்ததுடன், தன் உயிரையும் கொடுக்கும் அளவிற்குக் கொடைப் பண்பு பெற்று விளங்கினன். ஆதலால் மாடலன் கோவலனிடம்,

" இம்மைச் செய்தன யானறி நல்வினை"

என்று கூறி,

" உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்தித்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது"
—(அடைக்கலக் காதை, வரி 91-93)

என்று இரக்கப்பட்டான்.

கோவலன் எவரும் அறியாத நிலையில் தன் மனைவியோடு ஊரைவிட்டுச் சென்றதும், அவனுடைய சுற்றத்தார் உயிர் இழந்த உடல் எனத் துன்ப முற்றனர். ஊராரோ, இராமனைப்பிரிந்த அயோத்தி நகர மக்களைப் போலப் பெரிதும் வருந்தினர்.

" இன்னுயி ரிழந்த யாக்கையென்னத்
துன்னிய சுற்றம் துயர்க்கடல் வீழ்ந்ததும்"
—(புறஞ்சேரியிறுத்த காதை, வரி 59-60)

" பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்
அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்."
—(புறஞ்சேரியிறுத்த காதை, வரி 63-66)

இவற்றால் சுற்றத்தார்க்கும் ஊரவர்க்கும் உறுதுணையாக இருந்து கோவலன் உதவி புரிந்தான் எனக்கொள்ளலாம். இக்காரணங்களால்தான் இளங்கோவடிகள் இவனை, "மண்தேய்த்த புகழினன்," "வானவண்கையன்" என்று பாராட்டுகின்றார்.

மாடல மறையவன் கோவலனது கொடை வீரத்தைக் கூறினன். அவன் கோவலனைப் புகழ்ந்து கூறிய நீண்டபகுதியில் கோவலனுடைய மறச்செயல் ஒன்றும் உள்ளது. அச்செயல் அவனது **வீர வுணர்ச்சி**யை விளக்குவதாகும்.

கோவலன் மணிமேகலைக்குப் பெயரிட்ட நாளில் பெரும்பொருள் வாரி வழங்கினன். அப்பொழுது அவனிடம் பொருள் பெற்றுச் செல்ல வயது முதிர்ந்த அந்தணன் ஒருவன் வந்தான். பாகரால் கட்டுப் படுத்த முடியாத நிலை பெற்ற யானை மதங்கொண்ட நிலையில் விரைந்து ஓடிவந்தது. அந்த யானை அந்தணனைப் பற்றிக் கொண்டது. அது கண்ட கோவலன் விரைந்து சென்று, அம்மறையவனை யானையின் கையினின்றும் விடுவித்து, யானையின் மதத்தையும் அடக்கினன்.

"பாகுகழிந் தியாங்கணும் பறைபட வரூஉம்
வேக யானை வெம்மையிற் கைக்கொள
ஒய்யெனத் தெழித்தாங்கு உயர்பிறப் பாளனைக்
கையகத் தொழித்ததன் கையகம் புக்குப்
.........................
கடக்களி றடக்கிய கருணை மறவ"
—(அடைக்கலக்காதை, வரி 46-53)

இங்கு மாடலன் கோவலனைக் 'கருணை மறவ' என்று விளித்துள்ளான். அந்தணனுக்கு எய்தும் துயரினைப் பொறுமையாலும், தன்னுயிர்க்கு அஞ்சாது பாய்ந்து அடக்குதலாலும் 'கருணை மறவன்' என்று புகழப்பட்டான் என்பர் அடியார்க்கு நல்லார்.

கோவலன் கொடைப் பண்பில் சிறந்து விளங்கியது போலவே கலையுணர்ச்சி மிகக் கொண்டு கலைத் துறையிலும் சிறப்புற்று விளங்கினன். கலையுணர்ச்சி

யுள்ள கோவலன் இசை பயின்றிருந்தான்; யாழ் வாசிக்கும் திறமையும் பெற்றிருந்தான்; ஏழு ஆண்டுகள் இசை பயின்ற மாதவியின் மனமும் மகிழும்படி கடற்கரையில் யாழ் வாசித்தான்.

"கோவலன் கையாழ் நீட்ட அவனும்
காவிரியை நோக்கினவும் கடற்கானல் வரிப்பாணியும்
**மாதவிதன் மனமகிழ** வாசித்தல் தொடங்குமன்,"
—(கானல்வரி, 1)

மதுரைக்குச் செல்லும் வழியில் ஓரிடத்தில் பாணர்கள் யாழ் வாசிக்க, இவனும் வறுமையால் சுற்றத்தாரைப் பிரிந்து மனைவியுடன் காட்டு வழியில் அலையும் துன்பத்தையும் மறந்து, அவர்களோடு சேர்ந்து யாழ் வாசித்தான்.

" பாடும் பாணரின் பாங்குறச் சேர்ந்து
செந்திறம் புரிந்த செங்கோட் டியாழின்
தந்திரி கரத்தொடு திவவுறுத்தி யாத்து
ஏற்றுறுப் புடைமையின் பற்றுவழிச் சேர்த்தி
.......................
பாடற் பாணி அளைஇ ............"
—(புறஞ்சேரியிறுத்த காதை, வரி 105-113)

அழகு செய்தற்கு உரிய முறைகளை அறிந்து, அதில் மிக்க விருப்பமுடையவனாகவும் கோவலன் இருந்திருக்கிறான். இங்ஙனம் அவன் ஆடம்பர அழகை விரும்பினவனாக இருந்தமையை, மாதவி இவன் கொண்ட ஊடலைப் போக்கத் தன்னைப் பல வகையில் ஒப்பனை செய்து கொண்டமையால் தெரியலாம்.

இனி, கோவலனிடம் இருந்த மற்றொரு நற்பண்பினைக் காண்போம்: குற்றம் செய்வது மனிதஇயற்கை.

மனிதருள் ஒருவனுய்ப் பிறந்த கோவலனும் இக் குறைக்கு—இயற்கையின் முறைக்கு—விலக்கானவன் அல்லன். குறை உணர்ந்து வருந்தும் குணம் அவனிடம் இருந்தது. அக்குணத்துடன் திருந்தும் மனமும் இருந்திருப்பின், அவனது வாழ்வு வளம் பெற்றிருக்கும். குறையுணர்ந்ததுடன் அவன் நின்ருன்.

கண்ணகியை விட்டுச் சில ஆண்டுகள் கழிந்த பின்னர், மாதவியுடன் பல ஆண்டுகள் வாழ்ந்து பொருளையெல்லாம் இழந்த நிலையில் வறியவனுய் மீண்ட கோவலன், தன் குறையை உணர்ந்த நிலையில், "பயனில சொல்வாரோடும் புதிய காம நுகர்ச்சியை விரும்பும் காமுகரோடும் கூடிச் சிறுசொல் சொல்லும் இழிந்தோர் கூட்டத்தின்கண் மிக்க சிரிப்புக்கு உட்பட்டு மறதியைக் கொண்டு பெரியோர்களுடைய நல்லொழுக்கத்தைக் கெடுத்த எனக்குத் தீக்கதியன்றி நற்கதி உண்டாகுமா? தாய் தந்தையர்க்கு ஏவல் செய்வதிலும் வழுவினேன். சிறு பருவத்தில் மிகுந்த அறிவுடைய நினக்கும் தீமை செய்தேன்," என்று கண்ணகியிடம் கூறினுன்.

"வறுமொழி யாளரொடு வம்பப் பரத்தரொடு
குறுமொழிக் கோட்டி நெடுநகை புக்குப்
பொச்சாப் புண்டு பொருளுரை யாளர்
நச்சுக் கொன்றேற்கு நன்னெறி யுண்டோ ?
இருமுது குரவர் ஏவலும் பிழைத்தேன்
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையும் செய்தேன்,"
—(கொலைக்களக் காதை, வரி 63-68)

அவனுடைய குற்றமுடைய நெஞ்சம் அவனை மீண்டும் மீண்டும் தன் தவறுகளை எண்ணச் செய்யவே, அவன் கவுந்தியடிகளிடம் கண்ணகியைச் சுட்டி,

“நறிய மலர் போன்ற மேனியையுடைய இவள் நடுங் குதற்குக் காரணமாய துயரத்தினையுடைய, முன் அறியாத காட்டின் வழியிடத்து அலைந்து திரிந்து இழிவுற்றேன்,” என்றான்.

மதுரையில் மாதரி வீட்டில் கண்ணகியிடம், “நினது மென்மைமிக்க மலரடிகள் பருக்கைக் கற்கள் நிறைந்த நெறியாகிய அருமை வழியைக் கடத்தற்குரிய வன்மையைப் பெற்றன அல்லவே! வெம்மையுடைய மறவர், ஆறலைக்கும் அரிய சுரத்து நெறிக்குப் போந்தமைக்கு இரக்கம் கொண்டு எம்முடைய பெற்றவர் என்ன எண்ணுகின்றனரோ? யான் இவ்வாறெல்லாம் தவறியது மாயமோ! அன்றி முன் செய்த தீவினைப் பயனோ! என் உள்ளம் கலக்கமுற்றிருப்பதால் யான் ஒன்றையும் அறிய இயலா நிலையில் உள்ளேன்,” என்றான்.

(கொலைக்களக் காதை, வரி 57-62)

அடுத்து அவன் கூறுவது, அவன் மனம் எந்த அளவில் துயரத்தால் பீடிக்கப்பட்டு வருத்தமுற்றது என்பதைக் காட்டும்: “நாம் நகரை விட்டு இங்கு வருதல் குற்றம் உடைத்தாம் என்பதனைச் சிறிதும் நோக்காமல், நமது பெரிய நகரத்தினின்றும் இவ்விடத்துக்கு ‘எழுக’ என்று நான் கூறியதும் உடனே புறப்பட்டு விட்டாயே! என்ன காரியம் செய்துவிட்டாய்!”

“வழுவெனும் பாரேன் மாநகர் மருங்கீண்டு
எழுகென எழுந்தாய் என்செய்தனை”

(கொலைக்களக் காதை, வரி 69-70)

இது காறும் கண்டவற்ருல், கோவலன் கொடை வள்ளலாகவும், அஞ்சா நெஞ்சம் கொண்ட வீரனுகவும், சிறந்த கலையார்வம் கொண்ட கலைஞனுகவும், நல்ல சுவைஞனுகவும் தவறு உணரும் தன்மையனுகவும் விளங்கினன் என்பவற்றை அறிகின்ருேம்.

## 10. கலையும் வாழ்வும்

**கோவலனும் மாதவியும்** ஒருவரை ஒருவர் விரும்பி வாழ்ந்த வாழ்வுக்குக் **கலையே** அடிப்படையாகும். சோழநாட்டுப் பெருநகராக விளங்கிய காவிரிப் பூம் பட்டினத்தில் சித்திராபதி என்னும் கணிகைக்கு மகளாய்ப் பிறந்த மாதவி, ஆடல், பாடல், அழகு என்னும் மூன்று கலைகளையும் ஏழு ஆண்டுகள் பயின்று தேர்ந்தாள்.

சோழ மன்னன் முன்னிலையில் மாதவியின் ஆடல், பாடல், அழகுக் கலைகளுக்கு அரங்கேற்றம் நடத்தப் பட்டது. மாதவி பொன்னுல் செய்த பூங்கொடி ஆடுவதுபோல் நாட்டிய நூலின் இலக்கணத்தை நன்கு கடைப்பிடித்து ஆடினுள். அரங்கேற்றம் இனிது நடைபெற்றது. மாதவியைப் பெற்றவர் மகிழ்ந்தனர். ஆடலரங்கம் கண்ட மன்னவன் மகிழ்ந்தான் ; ஆயிரத் தெட்டுக் கழஞ்சு பொன்னும் பச்சைமாலை ஒன்றும் பரிசாக அளித்தான். அன்று முதல் மாதவி **கலை அரசி**யாக விளங்கத் தொடங்கினுள்.

குல முறைப்படி மாதவியைச் செல்வன் ஒருவனது காமக் கிழத்தியாக்கச் சித்திராபதி நினைத்தாள். மன்னன் தந்த பச்சை மாலையைக் கூனியின் கையில் தந்து அவளை நகரத்தில் சிறந்த தெருவில் நிற்கச் செய்தாள் ; பச்சை மாலையை ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன்

கொடுத்து வாங்குவோர்க்கு மாதவி உரியவள் ஆவாள் என்று கூறச் செய்தாள். கோவலன் புகார் நகரத்துப் பெருங்குடி ஒன்றில் பிறந்தவன். ஆதலால் மாதவியின் அரங்கேற்றத்தை அவையிலிருந்து கண்டான்; அவளுடைய ஆடலையும் பாடலையும் அழகையும் சுவைத்தான்; மன்னன் தந்த பரிசுகளைப் போற்றினான்; மாதவியின் கலைத் திறத்தில் மனத்தை ஈந்தான்; இந்நிலையில் மன்னன் தந்த பச்சை மாலையுடன் நகர நம்பியர் திரிதரு மறுகில் நின்று கூனி கூறியதைக் கேட்டான்; ஒன்றும் சிந்தியாமல் விலை கொடுத்து வாங்கி மாதவிக்கு உரியவனானான். மாதவி அவனது **வாழ்வரசி**யாக விளங்கத் தொடங்கினாள்.

மாதவி அழகையும் ஒரு கலையாகக் கொண்டு பயின்றவள். ஆசிரியர் மாதவியின் ஆடலையும் பாடலையும் அரங்கேற்று காதையுள் மிக்க விளக்கமாகக் கூறுகின்றார்:

"இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து
பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோ ராடலும் பாட்டும் கொட்டும்
விதிமாண் கொள்கையின் விளங்க அறிந்தாங்கு
ஆடலும் பாடலும் பாணியும் தூக்குங்
கூடிய நெறியின் கொளுத்துங் காலை
..............................
பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென
நாட்டிய நன்னூல் நன்கு கடைபிடித்துக்
காட்டினள்......................................"

(அரங்கேற்று காதை, வரி 12-17; 157-159)

மாதவி இந்திரவிழாவில் ஆடிய ஆடல்வகைகளை எல்லாம் ஆசிரியர் **கடலாடு காதை**யில் கூறுகின்றார்: பதினொரு வகை ஆடல்களை அவள் ஆடியதாகக் கூறுகின்

ருர்; அவளுடைய பாட்டிசைக்கும் திறத்தையும் யாழ் பயிலும் திறத்தையும் **கானல் வரி**யில் விளக்குகின்ருர்; அழகையும் ஒரு கலையாகவே மாதவி பயின்ருள் என் பதைக் **கடலாடு காதை**யில் கூறுகின்ருர். இவற்றை விளங்கக் காண்போம்:

**இந்திர விழா** முடிந்ததும் கோவலன் மாதவியிடம் ஊடல் கொண்டான். மாதவி தன்னைப் பல அணி களாற் புனைந்து ஊடற் கோலமோடிருந்த கோவலன் முன் வந்து நின்று மகிழ்வித்தாள். மணப் பொருள் கள் பல கூடிய நன்னீரால், தைலத்தால் மணமிக்க கூந் தலை ஆட்டினுள்; பின்னர்க் கூந்தலை அகிற் புகையால் உலர்த்தினுள்; அதனை ஐந்து வகையாகப் பகுத்து, அப்பகுதி தோறும் மான்மதச் சேற்றை ஊட்டினுள்; சீறடிக்குச் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டினுள்; அதனுல் சிவந்த சீறடிக்கேற்ற மெல்லிய விரல்களுக்கு மோதி ரம் பலவற்றை அணிந்தாள்; முத்த வளையைத் தோளுக்கணிந்தாள்; முகப்பில் மாணிக்கம் கட்டினுள்; வயிரங்கள் அழுத்தப்பட்ட செம்பொன் வளை, நவ ரத்தின வளை, சங்க வளை, பவழ வளை ஆகிய வளையல் களை முன் கையில் பொருத்தமுற அணிந்தாள்; வீரச் சங்கிலி, நேர்ஞ்சங்கிலி, நாண், சவடி, சரப்பளி முத லாய பிறவற்றைக் கழுத்தில் அணிந்தாள்; சிலவற்றின் தலைகள் ஒன்ருய்ப் பின் தொங்கி முதுகுப் புறத்தை மறைக்கச் செய்தாள்; வைரம் திரண்ட நீலக் குதம்பையைக் காதில் அணிந்தாள்; சீதேவி, செழுநீர் வலம்புரி, தலைப்பாளை, சிறன்பல்லி, வடவல்லி என்னும் இவற்றைக் கூந்தலில் அணிந்தாள். மாதவி தான் கற்ற அழகுக் கலையின் இலக்கண முறைப்படி தன்னை அழகு படுத்திக்கொண்டு, கோவலனுடைய ஊடலைத்

தவிர்த்தாள் என்கிறார் ஆசிரியர். அவள் அழகையும் ஒரு கலையாகவே பயின்றாள் என்பதை இதுகாறும் கண்ட விவரங்களால் நாம் அறியலாம்.

மாதவி இந்திர விழாவில் ஆடிய ஆடல் வகைகளைக் காண்போம்: முதலில் திருமாலைப் பற்றிய பாடலைப் பாடினாள்; பின்னர் வருணப்பூதர் நால்வரையும் பரவும் நால்வகைப் பாடல்களும் பாடப்பட்டன. பல்லுயிரும் தன் கலையால் நன்மைபெறும் தன்மையுடைய வானில் ஊர்ந்து செல்லும் சந்திரனும் பாடப்பட்டது. இவ்வாறு பாடல் பகுதி முடிந்த பின்பு ஆடல் தொடக்கமாயிற்று.

1. தேவர் புரமெறிய வேண்டுதலால் வடவை எரியைத் தலையிலேயுடைய பெரிய அம்பு ஏவல் கேட்ட அளவிலே அப்புரத்திலே அவுணர் வெந்து வீழ்ந்தனர். அவ்விடத்தில் வெண்பனிக்குவையாகிய பாரதியரங்கத்திலே உமையவள் ஒரு கூற்றினளாய் நின்று ஆடிய **கொடு கொட்டி** ஆடல்.

2. வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரி பூட்டி நெடும்புறம் மறைத்து, வார் துகில் முடித்துக் கூர் முள் பிடித்துத் தேர்முன் நின்ற திசைமுகன் காணும்படி பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய **பாண்டரங்கக்** கூத்து.

3. கண்ணன் ஆடிய ஆடல் பத்துள், கஞ்சன் வஞ்சனையால் வந்த யானையின் கோட்டை ஒடிப்பதற்கு நின்றாடிய **அல்லியத் தொகுதி** என்னும் கூத்து.

4. வாணனாகிய அவுணனை வெல்லற்கு அவனை அறைகூவி அழைத்து அவனைச் சேர்ந்த அளவில் உயிர் போக நெரித்துத் தொலைத்த **மல்லாடல்.**

5. கடலின் நடுவு நின்ற சூரனது வேற்றுரு வாகிய வஞ்சத்தையறிந்து அவன் போரைக் கடந்த முருகன் அக்கடல் நடுவே திரையே (அலையே) அரங்க மாக நின்று துடிகொட்டியாடிய **துடிக் கூத்து.**

6. அவுணர் தாம் போர் செய்தற்கு எடுத்த படைக்கலங்களைப் போரிற்கு ஆற்ருது போட்டு வருத்த முற்ற அளவிலே முருகன் தன் குடையை முன்னே சாய்த்து நின்ருடிய **குடைக் கூத்து.**

7. காமன் மகன் அநிருத்தனைத் தன் மகள் உழை காரணமாக வாணன் சிறை வைத்தலின், அவனுடைய 'சோ' என்னும் நகர வீதியிற் சென்று கண்ணன் குடங் கொண்டாடிய **குடக் கூத்து.**

8. ஆண்மைத் தன்மை திரிந்த பெண்மைக் கோலத்தோடு காமன் ஆடிய **பேடி** என்னும் ஆடல்.

9. மாயோனை உண்மைப் போரால் வெல்லல் ஆற்ருத அவுணர் பாம்பு, தேள் முதலியனவாய்ப் புகுதலை உணர்ந்து, அவன் அவற்றை உழக்கிக் களை தற்கு மரக்கால் கொண்டு ஆடிய **மரக்காலாடல்.**

10, அவுணர் போர்க் கோலத்திலிருக்கும்பொழுது தன்னைக் கண்டு மோகித்து விழும்படி கொல்லிப் பாவை வடிவாய்ச் செய்யோளாகிய திருமகளால் ஆடப்பட்ட **பாவை** என்னும் ஆடல்.

11. வாணனுடைய பெரிய நகரில் வடக்கு வாயி லில் உள்ள வயலிடத்தே நின்று அயிராணி என்பவள் ஆடிய **கடையம்** என்னும் ஆடல்.

இப் பதினொரு வகை ஆடலும் அவ்வாடல்கட் கேற்பப் பாடல்களும் மாதவியால் நிகழ்த்தப் பெற் றன. கடலாடு காதையில் விளக்கமுறும் இப்பகுதி, மாதயின் ஆடல் கலைத் திறனை நன்கு விளக்குகின்றது.

கானல் வரிப்பாடல் மாதவியின் இசைத்திறனை,

“ ............கானல் வரிப் பாடற்பாணி
நிலத்தெய்வம் வியப்பெய்த நீள்நிலத்தோர் மனமகிழக்
கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தாற்
பாடத் தொடங்குமன்.” (—பாடல் 24)

என்று கூறுகின்றது.

மாதவியின் ஆடற்கலை அவளைக் கோவலனுக்கு அறிமுகப் படுத்தியது; அழகுக் கலை கோவலன் உறவைக் காப்பாற்றிக்கொள்ளத் துணை செய்தது; பாடற்கலை கோவலன் உறவைப் பிரித்துவிட்டது. இனி மாதவி வாழ்வரசியாய் விளங்கிய வகையினைக் காண்போம் :

மாதவி உரிமை கொண்ட காதல் வாழ்வு வாழ்ந்தாள். மாதவி வாழ்ந்த வாழ்க்கை காதல் வாழ்க்கையே என்பதற்குச் சான்றாக இருப்பது ஊடல் உரிமையேயாகும். பழந்தமிழ்ச் சான்றோரும் காதல் வாழ்க்கையையே அன்பின் ஐந்திணை என்பர். மற்றவற்றை அவர்கள் கைக்கிளை என்றும் பெருந்திணை என்றும் பிரித்தனர். ஊடி மகிழும் வாழ்வே உரிமையுள்ள வாழ்வாகும் என்று வள்ளுவரும் கூறினார். ஊடலுக்குள்ள சிறப்பை உணர்ந்த காரணத்தால்தான் தமிழிலக்கியங்களில் மருதத்திணை இடம் பெற்றது. கோவலன் மாதவியிடம் பல ஆண்டுகள் வாழ்ந்ததற்கு இதனை ஒரு காரணமாகக் கூறலாம். மாதவி கோவலனுடன் ஊடலும் துணை செய்ய வாழ்ந்தாள் என்பதாற்றான் அவள் அவனுடைய உண்மைக் காதலியாக வாழ்ந்தாள் என்பதைத் துணியலாம். மாதவி வாழ்ந்த வாழ்வு **காதல் வாழ்வே** என்பதைக் கோவலன்

மதுரைக்குச் சென்று உற்ற கொடுமையைக் கேட்டுப் பெருந்துயர் அடைந்தபொழுது,

> " வசந்த மாலைவாய் மாதவி கேட்டுப்
> பசந்த மேனியள் படர்நோய் உற்று
> நெடுநிலை மாடத்து இடைநிலத்து ஆங்குஓர்
> படைஅமை சேக்கைப் பள்ளியுள் வீழ்ந்ததும்"
>
> —புறஞ்சேரி, வரி 67-70

என்று துன்புற்று வருந்தியதாக ஆசிரியர் கூறுகிறார்.

கோவலன் தன்னை விட்டுப் பிரிந்ததுடன் நில்லாது, கண்ணகியுடன் காவிரிப்பூம் பட்டினத்தையே விட்டுப் புறப்பட்டுச் சென்ற செய்தியைக் கேள்வியுற்று மாதவி பெரிதும் கலங்கினாள்; கடிதம் ஒன்று எழுதிக் கோசிகனிடம் தந்து,

> " கண்மணி அனையார்க்குக் காட்டுக"

என்றாள். கோவலன் முதல் கடிதத்திற்குப் பதில் தராமையையும் பொருட்படுத்தாமல், கொண்ட அன்பில் சற்றும் குறையாத நிலையில், மாதவி இரண்டாங் கடிதமும் எழுதினாள். இந்த இரண்டு கடிதங்களும் அவள் உரிமை உள்ளத்தையும் இன்ப விழைவையும் உண்மை அன்பையும் விளக்குவன. மாதவியின் இந்த அன்பு மனத்தை "மணிமேகலை"யாலும் நன்கு அறியலாம். அவள் அறவண அடிகளிடம் அறவுரை கேட்டுத் துறவு பூண்ட பின்னும் கோவலனை எண்ணும்போது கசிந்துருகும் உள்ளம் கொண்டாள்; ஒரு முறை வசந்த மாலையை நோக்கி, "என் காதலன் உற்ற கடுந்துயரைக் கேட்டவுடன் உயிர் துறக்காது கல் நெஞ்சோடு வாழ்ந்தேன்; ஊரவரின் பழிக்கும் ஆளாகி நாணம் துறந்தேன்," என்றாள்.

"காதலன் உற்ற கடுந்துயர் கேட்டுப்
போதல் செய்யா உயிரொடு நின்றே
பொற்கொடி மூதூர்ப் பொருளுரை இழந்து
நற்றெடி நங்காய் நாணுத் துறந்தேன்."
—(ஊரலர் உரைத்த காதை, வரி 38-41)

"தத்தம் துணையோடு சேர்ந்து மகிழத் துணைபுரியும் இளவேனில் ஓர் இளவரசன். அவன் முறை தவறிய காலம் இது. அந்தி வேளையில் தோன்றி நிலவு பரப்பும் மதியோ நேர்மையானவன். அவன் இயற்கையிலேயே குறைபாடுடையவன். கணவனோடு கூடி வாழ்வோர் பிரிந்தாலும், பிரிந்தவர் மறந்து வாழினும், காமன் மலராகிய தன் அம்பினால், பிரிந்து வாழும் உயிர்களைக் கொன்று விடுதல் புதுமை அன்று. இதனை அறிமின்."—**இதுவே மாதவி எழுதிய முதல் கடிதம்.**

"தேவரீர் திருவடிகளைத் திக்கு நோக்கித் தொழுதேன். குற்றம் தீர்ந்த நல்ல அறிவை உடையோய், பெற்றோர்க்குச் செய்யவேண்டிய பணிவிடைகளைத் துறந்து, நற்குலத்தில் பிறந்த கற்புடையாளுடன் இரவின்கண் நகரைத் துறந்து போனதற்குக் காரணம் யாது? அஃது என் தவறோ என்று என் நெஞ்சம் கவல்கின்றது. என் பிழையாயின் பொறுத்தருளல் வேண்டும். என் செயலற்ற நிலைமை நீக்கல் வேண்டும். இதனால் நுமக்குப் புகழ் குறையாதவாறு போற்றுவீராக".—**இது மாதவி எழுதிய இரண்டாங் கடிதம்.**

முதல் கடிதத்தைப் பெற்ற கோவலன் அதனை விடுவியாது இருந்தான். அக்கடிதம் அவனுக்கு அவளுடன் கூடி வாழ்ந்த நாட்களை நினைவூட்டியது. கடிதத்தின்மேலிருந்த இலச்சினையின் நறுநாற்றம் மாதவியின் கூந்தலின் மணத்தை அவனுங்கு நினைவூட்டியது.

அதனால் அதனை விடுவியாதிருந்து பின்னரே படித்தான். இரண்டாம் கடிதத்தைப் பெற்றபோது கோவலனுக்கு அத்தகைய தயக்கம் இல்லை. கடிதத்தைப் படித்த பின்னர்க் கோபமோ வெறுப்புணர்ச்சியோ கொள்ளாமல், அதனைக் கோசிகன் மூலமாகவே தன் பெற்றோர்க்கு அனுப்பி விடுகின்றான். முதல் கடிதம் காதல் மொழிகளைக் கொண்டதாகும். இரண்டாங் கடிதமோ மாதவியின் துறவு மனத்தைச் சற்றே காட்டுகின்றது. இக்கடிதத்தில் காதல் வாசகங்களைக் காண முடியவில்லை; நறுமணத்தை நுகர முடியவில்லை. கடிதத்தைப் பெற்ற கோவலனிடமும் தயக்கம் இல்லை; கடிதத்தைப் படித்த பின்னரும் கோபங் கொள்ளவில்லை.

மாதவியின் மனம் தன் செயலை எண்ணி வருந்தியிருக்கவேண்டும்; கண்ணகியின் இன்ப வாழ்வில் தான் குறுக்கிட்டது தவறு என்று அவள் எண்ணியிருக்க வேண்டும்; சில நாட்களே பிரிந்ததால் பிரிவின் துயரத்தைத் தாளமுடியாது வருந்தும் தன் நிலையைப் பல ஆண்டுகளாகப் பிரிந்த நிலையில் வாழ்ந்த கண்ணகியின் நிலையோடு ஒப்பிட்டு எண்ணிப் பார்த்தபோது, அவளது பொறுமையைப் போற்றி அவளை வழிபட வேண்டுமென்ற விழைவும் ஆர்வமும் மாதவிக்கு ஏற்பட்டிருக்க வேண்டும்; இனியேனும் கண்ணகிக்குத் தான் இடையூறு விளைவியாமல் வாழவேண்டுமென்றும், அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கவேண்டுமென்றும் அவள் நினைத்திருக்கவேண்டும். இரவோடு இரவாக எவரிடமும் சொல்லாமல் கோவலனும் கண்ணகியும் சென்றனர். அது குறித்து வருந்தியும், அதற்குக் காரணமாய் அமைந்தவள் தானே என எண்ணிக்

கலங்கியுமிருத்தல் வேண்டும். இவ்வளவு எண்ணப் போராட்டங்கள் அவள் உள்ளத்தே நடைபெற்றதன் விளைவாகவே இரண்டாம் கடிதம் அமைந்தது என்ன லாம்; கோவலன் கண்ணகிக்கு உரியவன்; அவளுக் கிருக்கும் உரிமை தனக்கு இல்லை என்று உணர்ந்ததால் தான் மணிமேகலையைக் **கண்ணகி மகள்** என்றே கூறி மகிழ்ந்தாள்.

"கணவற் குற்ற கடுந்துயர் பொருஅள்
மணமலி கூந்தல் சிறுபுறம் புதைப்பக்
கண்ணீ ராடிய கதிரிள வனமுலை
திண்ணிதிற் றிருகித் தீயழல் பொத்திக்
காவலன் பேரூர் கனையெரி மூட்டிய
**மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை.**"

(—ஊரலர் உரைத்த காதை, வரி 50-55)

மாதவியின் வாழ்க்கையை எண்ணும்போதெல் லாம் அவளைச் சிறந்த **வாழ்வரசி** என்றே கூறத் தோன்றுகிறது. கோவலனுடைய காதலியாக வாழ்ந்த அவள், அவனது உள்ளம் அறிந்து நடப்பதில் பெரிதும் விழிப்பாயிருந்தாள்; அவன் ஊடல் கொண்ட போதெல்லாம் கூடல் தந்து ஊடல் போக்கினுள்; அவன் விரும்பியவாறெல்லாம் நடந்தாள்; இறுதியில் பெண்மைக்கே உரிய ஐயப் பேய்க்கு ஆட்பட்டாள்; வாழ்விழந்தாள். ஆயின், விழிப்புடனிருந்து **தன் மகளைக் காத்தாள்**; தூய்மையை விரும்பி அவளைத் துறவற நெறியிற் புகுத்தினுள்; கணிகையரும் கற்போடு வாழ முடியும் என்று உலகவர் உணரச் செய்தாள்; கற்றவ ராலும் அவள் வாழ்வை உள்ளவாறு உணர்ந்தவ ராலும் மாதவி **கலையரசி** மட்டுமல்லள், **வாழ்வரசி**யு மாவள் என்று பாராட்டப்பட்டாள்; இன்றும் பாராட் டப்படுகிருள்.

# 11. கடற்கரையில் கோவலன்

கடற்கரையில் எங்குப் பார்த்தாலும் மக்கள் கூட்டம் மிகுந்திருந்தது. ஒரு புறத்தில் அழகிய வண்டி ஒன்று வந்தது. அதிலிருந்து அழகே உருவாக அமைந்த ஒருவனும் ஒருத்தியும் இறங்கினர். அவர்களை அடுத்து மற்றொரு பெண்ணும் இறங்கினள். அவள் கையில் அழகியதொரு யாழ் இருந்தது. மூவரும் மணல் மேட்டில் அமர்ந்தனர். அவர்கள் தாம் கோவலன், மாதவி, வயந்தமாலை என்போர்.

அவர்களிடை நிலவிய அமைதியைப் போக்க மாதவி வயந்தமாலையிடமிருந்த யாழை வாங்கிக் கோவலனிடம் தந்தாள். அதை வாங்கி அவன் பாடிய பாடலும் அதற்கு மாறாக மாதவி பாடிய பாடலும் பெருங் குடும்பமொன்றின் அழிவுக்கும் மதுரையின் அழிவுக்கும் காரணமாயமைந்தது.

கோவலன் கடற்கரையில் பாடிய பாடல்களின் சுவைபற்றியும் கடற்கரையில் யாழேந்திப் பாடுகையில் அவன் மனநிலை பற்றியும் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

கோவலன் மாதவியிடம் தான் கொண்டிருந்த நட்பு முறிந்துவிடக் கூடுமோ என்ற கவலையைப் பல நாட்களாகக் கொண்டிருந்தான். நகர நம்பியர் திரிதருமறுகில் மானமர் நோக்கியாகிய கூனியொருத்தி வைத்

திருந்த மாலை வாங்கியதால் மாதவியின் உறவு பெற்ற கோவலன், பொருளிழந்த நிலையில் உறவுக்கு ஊறு நேருமோ என அஞ்சினான். மாதவிக்குக் கோவலனிடம் உண்மையான உள்ளன்பு இருந்ததெனினும், கோவலன் தன்னிடம் பொருளில்லையே என்ற குறையைப் பெரிதாக்கிக்கொண்டு வருந்தினான். பொருள் ஒன்றே அவர்கள் உறவினைப் பிணித்து வளர்த்ததாக எண்ணிய கோவலன், பொருட்குறை உறவுக்கும் குறையாக அமைந்துவிடுமோ என அஞ்சத் தொடங்கினான். கடற்கரையை அடைந்த அவன், மனத்திருந்த முதற் குறை பணக்குறைதான். அக்குறையினை அடுத்துத் தான் மாதவி இந்திர விழாவின்போது பலர்முன் நடனமாடியதைப் பற்றி எண்ணினான். வறுமைக் குறை அவன் உள்ளத்தே உச்சநிலை பெற்றபோது, மாதவி பாடியதையும் அவன் உள்ளம் எண்ணவே, அவளிடம் வெறுப்பு ஏற்பட்டது.

பல ஆண்டுகள் நெருங்கிப் பழகிய கோவலன், மாதவியின் மனத்தை நன்கு அறிந்திருக்கக் கூடும். அவன் மாதவியைத் தனித்து எண்ணாது அவள் பிறந்த குடியைப் பற்றியும் எண்ணத் தொடங்கினான். 'பொருள் பெற்று இன்பம் நல்குவோர் இனத்தில் வந்தவள் தானே மாதவி' என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் இடம் பெறவே, மாதவியிடம் அவன் கொண்ட வெறுப்பு வளர்ந்துவிட்டது. இந்நிலையிலும் அமைதி நிலவியது. நிலவிய அமைதியைப் போக்கும் முறையில் மாதவி வயந்தமாலையிடமிருந்து யாழை வாங்கிக் கோவலனிடம் தந்தாள். கோவலனும் மாதவி மனம் மகிழவேண்டும் என்ற எண்ணத்தோடு காவிரியை நோக்கியவாறும் கடலை நோக்கியவாறும் பாடத்

தொடங்கினுன். கோவலன் உள்ளம் மாதவியின் மனம் தன் பாடலால் மகிழவேண்டு மென்று விரும்பி யதென்றாலும், பாடல்கள் கண்ணகியைப் பின்னணி யாகக் கொண்டு அமைவதை அவனுல் தடைசெய்ய முடியவில்லை. மாதவி மண்ணவரும் விண்ணவரும் கண்டு வியக்குமளவில் ஆடியதையும் தன்னிடம் பொரு ளில்லா நிலையையும் அடுத்தடுத்து எண்ணிய அவன் மனம், மாதவியிடம் வெறுப்பை வளர்த்ததுடன், கண்ணகியைப் பற்றி எண்ணும்படியும் செய்தது. அவன் பாடும்போதும் குழப்பம் நீங்காமலேயே கண்ணகியைப் பாராட்டியும் மாதவியைப் பாராட்டி யும் அவளிடம் உறவு கொண்டமைக்கு வருந்தியும் பாடுவதாகக் குறிப்புக்கள் உள்ளன.

இனிக் கோவலன் பாடல்களுள் சிலவற்றை எடுத் துக்கொண்டு, அவை எவ்வெவ்வாறு அமைந்துள்ளன என்று காண்போம்: கடற்கரையில் கோவலன் தன் னிடம் பணமில்லாக் குறையையும் மாதவி பலர்முன் நடனமாடியதையும் எண்ணி வருந்திய நிலையில் இருந் தான் என்றும், அந்த நிலையில் கண்ணகியை எண்ணிய அவன் அவள் நிலைக்காக வருந்தினுன் என்றும், தன் தவற்றைக் கடிந்து கூருத கண்ணகி உண்மையான கற்புடையவள் என்று எண்ணினுன் என்றும் கொள்ள, அவன் பாடிய முதல் மூன்று பாக்கள் இடந் தருகின்றன.

நாட்டுக்கு வளந்தரும் ஆற்றை நோக்கித்தான் அவன் பாடலைத் தொடங்கினுன். பாடலை மேலெழுந்த வாரியாகக் காணின், ஆற்றை விளித்து, மன்னன் வீரங் கூறிப் பாராட்டுவதாகவே தெரியும். இப்படிப் பாடலைக் காண்பதால் புதுமை காணமுடியாது. ஆசிரி

யர் இவ்வாறு மேற்போக்கான பொருள்காணும் நிலையிலும் காப்பியத்துக்கே சிறப்புத்தரும் காதையை அமைக்கவில்லை. எனவே, நாம் கோவலன் பாடலை நன்கு பாடி அவன் மனநிலையை அறிதல் வேண்டும். "காவிரி நாட்டு மன்னனாகிய சோழன் தன் புகழை நிலைநாட்டக் கங்கை பாயும் நாடு வரையில் செல்லுகின்றான். உன் கணவனாகிய சோழன் கங்கை என்னும் மற்றொரு பெண்ணை நாடிப் போனான் என்று காவேரி, நீ பிணங்கவில்லை. தன்னுடைய நாட்டில் செங்கோல் முறை தவறாமல் ஒழுங்காகச் சோழ மன்னன் ஆட்சி செய்வதால் கற்புடைய நீ இவ்வாறு உன் கணவனிடம் பிணங்காமல் உள்ளாய் என்று அறிந்தேன். காவிரியே, நீ வாழ்வாயாக!"

"கயல் மீன்களைக் கண்ணாகவுடைய காவிரியே! உனது தலைவன் உன்னைவிட்டுக் கன்னியாகுமரியை நோக்கிப் போனபோதும் நீ அவனுடன் பிணங்கவில்லை. மனவுறுதியுள்ள பத்தினிகளின் பெருங்கற்புத்திறன் இப்படித்தான் இருக்கும் என்று அறிந்தேன். காவேரியே, நீ வாழ்வாயாக!"

என்று கோவலன் பாடத் தொடங்கினான். மாதவி நீட்டிய யாழை வாங்கியபோது கோவலன் அவள் மனம் மகிழப் பாடவேண்டுமென்றுதான் எண்ணியதாக ஆசிரியர் குறிப்பிடுகின்றார். ஆனால் கண்ணகி பற்றிய பின்னணி பாடலில் அமைவதை அவனால் தடைசெய்ய முடியவில்லை. தன் போற்றா வொழுக்கம் கண்டும், கண்ணகி தன்னைக் கடிந்து திருத்த முற்படாமை அவளது பெருங்கற்புத்திறன் என்று தான் அறிந்ததாகக் கோவலன் கூறுகின்றான் என்று கொள்ளலாம். கண்ணகி பற்றிய எண்ணம் அவனுக்கு வந்த

தும், அவளுடன் தான் மகிழ்வோடு கழித்த சில ஆண்டுகளும் பின்னர்த் தனக்கும் மாதவிக்கும் ஏற்பட்ட நட்பும், அந்த நட்பிடைக் கழிந்த பல ஆண்டுகளும் நினைவுக்கு வந்திருக்கும். மாதவியிடம் ஏற்பட்ட வெறுப்பு, ஊரெல்லாம் விழாவில் கலந்து மகிழும் நிலையில் கண்ணகி மட்டும் தனியளாய்த் தன் நினைவு கொண்டு வாடியன்றோ இருப்பாள் என்ற எண்ணத்தை உண்டாக்கி விட்டது. பலர் காண நடிப்பதும் பேசுவதும் கொண்ட மாதவியை அவனது மனம் இப்போது 'உளமார' விரும்பவில்லை. ஐயம் அவனிடம் குடிபுகுந்து கொண்டது. ஐயம் அன்புடையவர்கள் வாழ்க்கையைக் குலைக்கக்கூடியதல்லவா? அதனாற்றான் அவன் கண்ணகியைப் பற்றி எண்ணத் தொடங்கினான். அவளது கற்புத்திறன் அவனுக்கு வியப்பும் மகிழ்ச்சியும் தந்தது. யாழ் வாங்கி மரபாக வந்த ஆற்று வரியைப் பாடும்போது, அவன் உள்ள உணர்ச்சிகள் 'பா'வடிவில் அமைந்தன. கோவலன் கடற்கரையில் கண்ணகி பற்றி எண்ணி இருப்பான் என்பதை, ஆசிரியர் அவனை அடுத்துக் கண்ணகி மனையில் காட்டுவதிலிருந்து அறியலாம். கண்ணகி மனைவந்த கோவலன்,

> "............தன்பைந்தொடி
> வாடிய மேனி வருத்தங் கண்டு......"
>
> —(கனாத்திறம், வரி 67-68)

வருந்தியதாகவே ஆசிரியர் குறிப்பிடுகிறார். அடுத்து அவன்,

> "சலம்புணர்க் கொள்கைச் சலதியொடு ஆடிக்
> குலந்தரு வான்பொருள் குன்றம் தொலைத்த
> இலம்பாடு நாணுத் தருமெனக்கு."
>
> —(ஷை, வரி 69-71)

என்று கூறியதாகக் கூறுகிருர். கடற்கரையில் அவன் எதைப் பெரியதாக எண்ணி வருந்திஞனே, அதைக் கண்ணகியைக் கண்டதும் கூறிவிட்டான். பல ஆண்டுகளாகப் பிரிந்திருந்த தன் மனைவியிடம் அவன் வேறு ஏதும் பேசவில்லை; பொருளில்லாத் தன் குறையையே கூறினன். கண்ணகியின் வாடிய மேனியைக் கண்டு வருந்திய அவன் தன் வறுமைக் குறையை வாய்விட்டுக் கூறினன்; எந்தக் குறையை மாதவியிடம் கூறக்கூடாது என எண்ணி வருந்தித் துயருற்ருனே அந்தக் குறையைத்தான் கண்ணகியைக் கண்டதும் கூறினன். அவன் மனம் மாதவியினும் கண்ணகியைப் போற்றியதற்கு இஃது ஒரு சான்று. தன் குறைகளை உள்ளபடியே கூறி ஆறுதல் பெறக் கண்ணகியே ஏற்றவள் என்பதை அவன் மனம் கடற்கரையிலேயே எண்ணி யிருக்கவேண்டும்; ஆயினும் மாதவியின் மனம் மகிழ யாழ் வாசிக்கவே தொடங்கினன். ஆனல் உள்ளத்து உணர்ச்சி சொல்லாகிப் 'பா' வடிவு பெறுவதை அவனல் தடுக்க முடியவில்லை.

ஆற்றின் சிறப்பைப் பாடிய கோவலன், அடுத்து நகரின் வளம்பற்றிப் பாடத்தொடங்கினன்: "கடற்கரை யோரத்தில் தலைவர், தலைவியை விட்டுப் பிரியும் போது கடல் தெய்வத்தைச் சுட்டிக் காட்டி அதன் மேல் பலமுறை ஆணையிட்டு விரைவில் திரும்பி வருவதாக உறுதி மொழிகளைச் சொல்லிப் பிரிந்தவர் தலைவியை வஞ்சித்துவிட்டார். நாங்கள் தலைவரைப் பற்றிப் பெருமையாக எண்ணியிருந்தோம். அவர் வஞ்சிக்கும் இயல்பினர் என்பதை நாங்கள் தெரிந்துகொள்ள முடியவில்லை. எங்களைப் போலவே எங்கள் ஊரிலுள்ள ஆம்பற் பூக்களும் ஏமாந்துவிடும். கடற்கரையில் உள்ள

வெண்ணிறம் உள்ள சங்குகளையும் முத்துக்களையும் சந்திரனாகவும் அதனைச் சுற்றியுள்ள நட்சத்திரங்களாகவும் எண்ணி ஆம்பற் பூக்கள் மலர்ந்துவிடும். இவ்வாறு வஞ்சனை அறியாத ஊரே எங்கள் ஊர்,'' என்று புகாரின் சிறப்பைப் பாடினான் கோவலன். வருவேன் என்று சொல்லிச் சென்ற காதலன் வராமையைக் கண்ட தலைவி ஆற்றாமையால் கூறுவதாக உள்ளது இப்பாடல். இனி இப்பாடல் வரைவு கடாயது அல்லது கையுறை என்னும் துறையாகும் என்பர் உரை காரர். வரைவுகடாயது என்பது, மறைவில் கண்டுமகிழ விரும்பும் தலைவர் ஊர் அறியக் கற்பு வாழ்வு மேற்கொள்ள மணம் முடித்துக் கொள்ளவேண்டுவது என்பது பொருள்.

> '' மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து
> நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
> வான்ஊர் மதியம் சகடணைய வானத்துச்
> சாலி யொருமீன் தகையாளை
> மாமுது பார்ப்பான் மறைவழி காட்ட''
>
> —(மங்கலவாழ்த்து, வரி 48-52)

கண்ணகியைத் தாம் மணந்ததை மனத்திருத்திப் பின்னர் மறைவழி மணந்த கண்ணகியை விட்டுப் பிரிந்து வாழ்ந்தமைக்கு வருந்தி ஏமாற்றங்கொண்ட கண்ணகி சொல்வது போல,

> '' கரியமலர் நெடுங்கட் காரிகைமுன்
> கடற்றெய்வம் காட்டிக் காட்டி
> அரியசூள் பொய்த்தார் அறனிலரென்
> றேழையம்யாங் கறிகோமைய''

என்று பாடுவதாகக் கொள்ளலாம். கண்ணகியின் அறியாமையினைப் புகார் நகர ஆம்பலின் தன்மை

யினைக் கூறுவதன் மூலம் தெளிவு படுத்தியதாகவும் கொள்ளலாம். கோவலன் தொடர்ந்து பாடும் பிற பாடல்கள் அகப்பொருட் சுவையுடன் கூடி இன்பம் பயக்கின்றன. அவை யாவும் தலைவன் ஒருவன் கடற் கன்னி ஒருத்தியைக் கண்டு காதல் கொண்டு கூறுவன வாகவே உள்ளன. "நிறைமதி வாள்முகத்து நேர் கயற்கண் செய்த உறைமலி உய்யா நோய், ஊர் சுணங்குமென் முலையே தீர்க்கும்போலும்" என்று அவன் பாடும் பாடல், கடற்கன்னியின் எழில் நலம் கூறுவதாகவும் இளமையின் ஆற்றலைப் புலப்படுத்து வதாகவும் உள்ளது. 'புதிய மணல் நிறைந்த நல்ல மணம் வீசும் மலர்ச்சோலையில், அலைகள் பரந்தோடும் கடலோரத்தில் சங்குகள் நிறைந்த நீர்த்துறையில் ஒரு பெண் அவளுடைய இனிய மொழியும் பருத்த வனப்பு மிக்க மார்பும் நிலா முகமும் வளைந்தபுருவங்களும் நுண் ணிய இடையும் எனக்கு வருத்தமும் தந்து நோயையும் தந்தன," என்று பாடுகின்றான்கோவலன். இப்பாடலில் இன்பச் சுவை சிறந்திருத்தல் உணர்ந்து மகிழ்தற்குரி யது. கடற்கரையில் அமர்ந்துள்ள கோவலன் கடற் கன்னியைக் கண்டதாகவும் காதல் கொண்டதாகவும் காதல் மிகுதியால் வருந்துவதாகவும் உள்ள பாடல்கள் சுவை பயக்கின்றன.

தலைவன் புகழை எல்லாம் கேட்டுக்கொண்டு நின்ற தலைவி வெட்கிச் சற்றே ஓடுகின்றாள். அந்த வேளையில் அன்னம் ஒன்றைத் தலைவன் கண்டான். "அன்ன நடை" என்றல்லவா பெண்கள் நடையைப் புகழ்வார் கள்! தலைவன் அன்ன நடையிலும் உயர்ந்த நடை யாகத் தலைவியின் நடையைக் கருதினான்.

"சேரல் மடஅன்னம் சேரல் நடைஒவ்வாய்
சேரல் மடஅன்னம் சேரல் நடைஒவ்வாய்
ஊர்திரை நீர்வேலி உழக்கித் திரிவாள்பின்
சேரல் மடஅன்னம் சேரல் நடைஒவ்வாய்"
—(கானல் வரி-23)

என்று கோவலன் தலைவியின் நடையழகைப் பாராட்டினான். இப்பாடல் மாதவியை உள்ளத்திருத்திப் பாடியதாகக் கொள்ளலாம். 'அலைகள் புரளும் கடலை வேலியாகக் கொண்ட இவ்வுலகத்தாரை வருத்தித் திரிகின்ற இவள்' என அவன் தரும் சிறப்பு மாதவிக்கே உரியதென்னலாம். பலர் முன்னர் நடனமாடினாள் என்ற குறையை எண்ணி வருந்தியவனின் உள்ளத்தின் எதிரொலியாகவே 'ஊர் திரை நீர் வேலி உழக்கித் திரிவாள்' என்பது அமைகிறது. மாதவி மனம் மகிழப் பாடத்தொடங்கியவன், அவள் நடையை அன்ன நடைக்கு ஒப்பிட்டு, அதனினும் சிறந்தது மாதவியின் நடை என்று கூறினான் என்று கொள்ளலாம்.

கோவலன் இத்துடன் தன் பாடலை நிறுத்திக் கொண்டான். அவன் பாடிய பாடல்கள் மரபு வழி வந்த அகப்பொருட் கருத்துடைய பாடல்களே. அவற்றுள் சில அவனது மனம் கண்ணகியை எண்ணியனவாகக் கொள்ள இடந்தருகின்றன. சில மாதவியைப் புகழ்வதாகக் கொள்ளலாம். சுவையான பல பாக்களைப் பாடி நிறுத்திய கோவலன், பெருத்த மனக் குறையைப் பாடித் தீர்த்தவன்போல இருந்திருக்கக் கூடும்.

கோவலன் இங்ஙனம் கடற்கரையில் பாடிய பாடல்களைச் சிலப்பதிகாரம் 'கானல்வரி'யில் படித்து மகிழலாம்.

## 12. கடற்கரையில் மாதவி

கோவலன் பாடிய அகப்பொருள் கருத்தமைந்த பாடல்களைக் கேட்ட மாதவி அவனிடம் ஐயம் கொண்டாள். மாதவி ஐயம் கொண்டு குறை கண்டதேன்?

கோவலன் மணமானவன் என்பதையும் தன்னிடத்திலுள்ள அழகு, ஆடல், பாடல் என்பனவற்றைக் கண்டு மயங்கித் தன் உறவு கொண்டு வாழ்வதையும் மாதவி நன்கு அறிந்தவள். அவன் கலையார்வம் கொண்டவன் என்பதையும் அவள் அறிவாள். மாதவியிடம் உள்ள கலையைத் தானன்றிப் பிறர் எவரும் காணுதல் கூடாது என்ற குறுகிய மனம் கொண்டவன் கோவலன் என்பதையும் மாதவி அறிந்தவளே. இந்திர விழாவின்போது அவள் பலர்முன் நடனமாடியது கண்டு மனம் பொருத கோவலன் ஊடல் கொண்டான். மாதவி அவன் ஊடலை உணர்ந்து அவன் உளம் மகிழும் வகையில் கூடல் நல்கி அவனது ஊடல் போக்கினுள். இங்ஙனம் அமைந்த பல நிகழ்ச்சிகளைக் கொண்டு கோவலன் உள்ளத்தை மாதவி நன்கு உணர்ந்துகொண்டவள் என்பதை அறியலாம். தொடக்கத்தில் இருந்ததுபோல் அல்லாது கோவலன் இப்போதெல்லாம் தன்னிடம் மாருகப் பழகி வருகின்ருன் என்பதை அவ்வப்போது கண்டு அவள் மனம் நொந்திருக்கக் கூடும். அதனல்

அவள் கோவலன் பாடிய பாட்டுக்களைக் கேட்டதும், "இவன் வேறு ஒருத்தியிடம் அன்பு கொண்டுள்ளான்; அதனால் தன் நிலை மயங்கினான். இவன் பாடல்கள் அதைத்தான் தெரிவிக்கின்றன," என்று துணிந்தாள்; அதனாற்றான் தன் உள்ளத்தே கரவான எண்ணம் ஏது மில்லை என்ற போதிலும், கோவலன் பாடியது போலவே, தானும் காதல் குறிப்புடையவள் போலப் பாடினாள்; நிலமகள் வியக்கும்படியாகவும், உலக மக்கள் மனம் மகிழும்படியாகவும், யாழிசையோடு பொருந்த இசை பாடினாள். அவள் பாடிய பாடல்கள் காதலி யொருத்தி காதலன் பிரிவுக்கு ஆற்றாமல் வருந்து வதாகக் காதல் கருத்துக்கள் அமைந்திருந்தன.

கோவலன் பாடிய பொழுது முதலில் காவிரியின் சிறப்பையும், பின்னர்ப் புகார் நகரத்தைப் பற்றியும் அதன்பின் தான் காதலித்த பெண்ணால் உண்டான காம நோயைப் பற்றியும் பாடினான். அதே முறையில் மாதவியும் அவன் பாடி முடித்த பின்பு யாழ் வாங்கிப் பாடத் தொடங்கினாள். அவள் பாடிய பாடல் களுட் சிலவற்றின் பொருளை இங்குக் கண்டு, அவற் றின் நயம் உணர்வோம்.

மாதவி காவிரியின் சிறப்பை முதலில்பாடுகின்றாள். காவிரியை அவள் ஒரு பெண்ணாகக் கூறினாள். "ஆற் றங்கரையில் வண்டுகள் ஒலிப்பது கைவளையல்களின் ஒலி போலிருந்தது. நீரில் மிதந்து வந்த பூக்கள் பெண் களின் ஆடைகள் போல் விளங்கின. ஆற்றில் உள்ள கயல் மீன்கள் பெண்கள் விழிகள் போல ஒளி செய் தன. இந்த நிலையில் ஆறு ஓடுவது, ஒரு பெண் களிப் புடன் அசைந்து நடப்பது போல இருந்தது. இவ் வாறு களிப்புடன் நடப்பதற்கு அவள் கணவனை

சோழ மன்னனின் செங்கோல்தான் காரணம்" (கானல் 25) என்று மாதவி பாடினாள்.

கோவலன் இவ்வாறு காவிரியின் சிறப்பைப் பற்றிப் பாடியபோது காவிரியின் கணவனாகிய சோழன் கங்கை, குமரி என்னும் பிற பெண்கள் வாழும் நாடுகளை நாடிப் போன போதிலும் அவள் பிணங்காமலிருந்தாள் என்றும், அவ்வாறு அவள் அமைதி கொண்டமையைக் கற்புடைய பெண்ணின் சிறந்த குணம் என்றும் கூறிக் காவிரியைப் புகழ்ந்தான். ஆனால் மாதவியோ, காவிரியின் சிறப்பெல்லாம் அவள் கணவனுடைய புகழாலும் வலிமையாலுந்தான் என்று கணவனுடைய சிறப்பைக் குறித்துக் காட்டினாள். இக்கருத்தை வலியுறுத்தும் முறையில் மாதவி காவிரியாற்றின் சிறப்பைக் கூறும் வாயிலாக மேலும் இரண்டு பாடல்களைப் பாடினாள். இப்பாடல்கள் மாதவியின் மனநிலையை நன்கு விளக்குவனவாய் உள்ளன.

"தன் கணவன் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும். அவன் அடுத்தவர் பழிச்சொற்கட்கு ஆளாகக் கூடாது என்றுதான் 'மனைவி' என்ற நிலையில் உள்ள எந்தப் பெண்ணும் எண்ணுவாள்; தன் எண்ணம் நிறைவேறத் தக்க நிலையில் ஆவன செய்வாள். மாதவியிடமும் இந்த விருப்பம்தான் குடி கொண்டிருந்தது. கோவலன் வேறொருத்தியிடம் காதல் கொண்டு தான் தன் நிலை மயங்கி அவ்வாறு பாடினான் என்று எண்ணிய அவள் உளம் வருந்தியிருக்கக் கூடும். தன் வருத்தத்தை எடுத்துக் கூறித் தான் விரும்பும் தூய நிலையையும் சொல்லி, அவள் தன் துயரைப் போக்கிக் கொண்டிருக்கலாம். ஆனால் அவள் அவ்வாறு செய்யா

மல் பாடலின் மூலம் தன் கருத்தைக் கூறத் தொடங்கினுள். கணவன் ஒழுக்க நிறைவே மனைவியைத் தூய்மையுடையவளாகவும் செய்கின்றது என்பது அவள் நம்பிக்கையாக இருந்திருக்கக் கூடும். அதனுல் தான் அவள் காவிரியின் வளம் பற்றிப் பாடுகையில் காவிரியின் சிறப்பெல்லாம் அவள் கணவனுடைய புகழாலும் வலிமையாலுந்தான்" என்ருள். இதுவரையும் மகிழ்ந்து வாழ்ந்த கோவலன் வேறு ஒருத்தியை உள்ளத்தால் எண்ணுவதையும் மாதவி மனம் விரும்பவில்லை என்றும், அது பொருமலே அவள் அவ்வாறு பாடினுள் என்றுங் கொள்ளலாம்.

அடுத்துப் புகார் நகர வளம் பற்றி மாதவி பாடிய பாடலுள் ஒன்றினைக் காண்போம் : தலைவியைத் தேடி வரும் தலைவனை எள்ளி நகையாடும் அளவில் அவள் பாடல்கள் அமைந்துள்ளன.

"நீர் எம் தலைவியை உள்ளன்புடன் கூடிய காதலோடு தேடி வரவில்லை. எம் தலைவியின் பற்கள் முத்துக்களைப் போன்றிருக்கும். அப்பற்களை உண்மையான முத்துக்கள் என்றெண்ணி அவற்றை விலைக்கு வாங்கும் வணிகன் போல் நீர் அவளிடம் வந்தீர் ; அப்படியே அவளைக் களவு மணமும் செய்துகொண்டீர். அதனுல் எம் தலைவியின் உடல் மெலிந்து அவள் கைவளைகள் கழன்றுவிடுகின்றன. முறைப்படி மணம் செய்த பெண்ணொருத்திக்கு இவ்வாறு கைவளைகள் கழன்றுவிடுவதை நாங்கள் எவ்வாறு அறிவோம் ? களவில் கூடிய எங்கள் தலைவி கூடாததுபோல எவ்வளவு நடித்தாலும், அவளது உடல் வேறுபாடு அவளை அறியாமல் களவு மணத்தை வெளிப்படுத்துகின்றது. இந்த நிலையில் கள்ளமற்ற எங்கள் தலைவியை

ஏமாற்றிப் போயினீர்,'' என்று பாடினாள் மாதவி.

கோவலன், மாதவி ஓர் குறிப்புடன் பாடினாள் என்றெண்ணியதற்கு இப்பாடலுங் காரணம் என்று சொல்லலாம். புகார் நகரின் சிறப்பைக் கூறுகையில் தலைவியின் அறியாமை பற்றி இங்ஙனம் பாடியவள், அங்குள்ள ஆம்பல் பூக்கள் புன்னை மரத்தின் மேலிருக்கும் அன்னப் பறவையை முழு நிலா என்று நினைத்துப் பூத்தன என்று கூறி, அவற்றின் அறியாமையையும் தோன்ற வைக்கின்றாள். தொடர்பு கொண்ட காதலன் தன்னை விட்டுப் பிரிந்து சென்றதை எண்ணி வருந்தும் காதலியின் பேச்சுக்களாக இப்பாடற் கருத்துக்கள் உள்ளன.

''கடற்கரை ஓரத்திலுள்ள சோலையில் என்னைக் கண்டு என் நலன் உண்ட தலைவர் விரைவில் வந்து காணுவதாகச் சொல்லிச் சென்றாரே! அவர்தாம் என்னை மறந்த போதிலும் அவருடைய தேரும் என்னை நாடி வர மறந்ததே. அன்னங்களே, மலர்க்கொத்துக்கள் நிறைந்த கொடிகளே, என்னை அவர் மறந்தாலும் நான் அவரை ஒருபோதும் மறவேன்,'' என்பது போன்ற கருத்தமைந்த பாக்களையும் அவள் தொடர்ந்து பாடினாள்.

" தம்முடைய தண்ணளியும் தாமுந்தம் மான்தேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க
அம்மென் இணர அடும்புகாள் அன்னங்காள்
நம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்.''

—(கானல். 32)

கோவலன் மாதவியைப் பற்றி ஐயுறுதற்கு இப்பாடல்கள் துணை செய்தன. மேலும் அவள் பாடும் பாடல்களுள் ஒன்றனைக் காண்போம் :

"கடற்கரைச் சோலையில் உள்ள உப்பங்கழியில் என்னைப் பார்த்து என்னை விரும்பினர் ஒருவர். அவர் தோற்றம் என் கண்களை விட்டகலாது. அந்தச் சோலையில் நாங்கள் இருவரும் களிப்புற்றிருக்கும் போது அன்னப் பறவை ஒன்று தன் பெட்டை அன்னத்தோடு விளையாடிக்கொண்டிருந்தது. அதனை அவர் பார்த்துக்கொண்டிருந்தார். இப்போது நாங்கள் பிரிந்திருந்தாலும், இருவரும் ஒன்ருகிவிட்டோம். என் மார்பில் படர்ந்திருக்கும் தேமல் எவ்வாறு என்னைப் பிரியாமல் அழகு செய்கின்றதோ, அவ்வாறே அவரும் என் உளம் விட்டுப் பிரியாது எனக்கு இன்பம் தருகின்ருர்."

மாதவி இறுதியாகப் பாடிய பாடல், "எங்கள் இன்பத்தைக் கண்ட அன்னமே, நீயாவது என் தலைவரிடம் சென்று என் குறையைச் சொல்லாமல் உள்ளனையே! என் சோலையுள் நீ நுழையாதே," என்னும் கருத்தினைக் கொண்டுள்ளது.

இதுகாறும் மாதவி பாடிய பாடல்கள் கோவலன் அவளிடம் கொண்டிருந்த வெறுப்பையே வளரச் செய்தது. மாதவியிடம் குடி கொண்டிருந்த கலையை அவன் யாவரும் கண்டு சுவைத்தற்குரிய ஒன்று என்று எண்ணத் தவறினன்; மாதவி எவ்வாறு தனக்குரியவளோ அவ்வாறே அவள் கற்ற கலையும் அவனுக்கே உரியதென எண்ணினன். இந்தக் குறுகிய மனத்தால் தான் அவன், மாதவி இந்திர விழாவில் ஊரார் எல்லாரும் கண்டு களிக்கும்படியாக நடனமாடியதை வெறுத்தான். அந்த வெறுப்பு மறைவதற்கு முன்னரே அவன் மாதவியின் வரிப் பாடல்களையும் கேட்கும் நிலை ஏற்பட்டுவிட்டது.

கோவலன் பாடிய முறைப்படியே பாடி முடித்த மாதவி, அத்துடன் நில்லாமல், மேலும் தொடர்ந்து பாடத் தொடங்கினுள்; "சூரியன் மறைந்தான். எல்லோரும் உறங்கும் வேளை. என் கணவரோ என்னை விட்டுப் பிரிந்து போயிருக்கின்றுர். இந்த வேளையில், மாலைப் பொழுதே, நீ ஏன் என்னை இப்படித் துன்புறுத்துகிருய்? உலகையே துயரமடையும்படி செய்வதுதாஞ உன் தொழில்? இப்படிக் கொடுமை செய்தால் நீ வாழமாட்டாய்," என்பது போன்ற கருத்தமைந்த நான்கு பாடல்கள் பாடினுள்.

*" தீத்துழைஇ வந்தஇச் செல்லல் மருள்மாலை*
*தூக்காது துணிந்தஇத் துயர்எஞ்சு கிளவியால்*
*பூக்கமழ் கானலில் பொய்ச்சூள் பொறுக்கென்று*
*மாக்கடல் தெய்வம்நின் மலரடி வணங்குதும்"*

—(*கானல் வரி, 51*)

ஒரு காதலன்மேல் மனம் வைத்ததுபோல் மாதவி பாடியதைக் கேட்ட கோவலனுக்குக் கோபம் வந்துவிட்டது. பரத்தையர் மரபில் வந்த மாதவி இவ்வளவு காலமாகப் பொய் வார்த்தைகளால் தன்னை ஏமாற்றிவிட்டாள் என்ற எண்ணமும் வெறுப்புணர்ச்சியும் கோவலனிடம் வளர்ந்துவிட்டன. எனவே, அவன் பல ஆண்டுகளாகக் கண்ட மாதவியின் பேரன்பை உடனே 'மாயப் பொய்' என்று எண்ணி விட்டான்; இவ்வாறு எண்ணியதும் வெறுத்து எழுந்து பிரிந்துவிட்டான். பகலெல்லாம் மாதவியுடன் இருந்தவன் பொழுது போன நிலையில் அந்த அழகுச் செல்வியை உடன் வரச் சொல்லிப் புறப்படாமல் தனியே விட்டுச் சென்றுன். அவன் அவளிடம் சொல்லாமல்

எழுந்து சென்றான். ஆசிரியர் உள்ளம் இத்துயர நிகழ்ச்சியினைக் குறிப்பிடும் பொழுது வருந்துகின்றது :

> "உவவுற்ற திங்கள்முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தவனாய்ப்
> பொழுதீங்குக் கழிந்ததுஆகலின் எழுதும்என்று உடன்எழாது
> ஏவலாளர் உடன்சூழ்தரக் கோவலன்தான் போனபின்னர்"
>
> —(கானல் வரி, 52)

இதுவரையும் மாதவி பாடிய வரிப் பாடல்கள் சிலவற்றின் கருத்துக்களையும் அவற்றின் நயங்களையும் கண்டோம்; அவற்றுடன், அவற்றை மாதவி பாடியபோது கோவலனுக்கு ஏற்பட்டிருக்கக் கூடும் மன நிலையையும் ஒருவாறு கண்டோம். இனி மாதவி இப்பாடல்களைப் பாடியது ஏன் என்பதைக் காண்போம் :

பெற்றவர் பார்த்துத் திருமணம் செய்விக்கும் வாழ்க்கையில் சிலரது மணவாழ்க்கை காதல் வாழ்க்கையாக வளர்வது உண்டு. அது போலவே கோவலனுடன் மாதவி தொடங்கிய வாழ்க்கையும் காதல் வாழ்க்கையாக அமைந்தது. கோவலனும் மாதவியும் வாழ்ந்த வாழ்க்கை காதல் வாழ்க்கையே என்பதற்கு நல்ல சான்றாக இருப்பது ஊடல் உரிமையேயாகும். காதல், உரிமையுள்ள வாழ்வில் மலர்வதாகும். திணை வகுத்த சான்றோரும் காதல் வாழ்க்கையை 'அன்பின் ஐந்திணை' என்று கூறினர்.

காதல் வாழ்வில் உரிமை மணம் கமழ்வதற்கு ஊடல் ஒரு துணைக் கருவியாக உள்ளது. வெளியுலகில் உலகக் கடமைகளில் ஈடுபட்டுள்ள ஆணுக்கு உரிமை இயல்பாக விளங்குகின்றது. பெண்ணின் உரிமை வாழ வாய்ப்பளிப்பது வீடேயாகும். கணவனிடம் தவறு கண்டபோதும் காணாதபோதும் தவறு ஒன்

றனேக் கற்பனே செய்து ஊடுதல் ஆகிய இவ்விரு வகை ஊடலில் பெண்ணுரிமை விளங்குகின்றது.

> " இல்லை தவறு அவர்க்கு ஆயினும் ஊடுதல்
> வல்லது அவர் அளிக்கு மாறு" —(குறள் 1321)

என்று வள்ளுவரும் ஊடலின் சிறப்பை 'ஊடல் உவகை'யில் கூறுகின்ருர். கோவலன்—மாதவி வாழ்வில் ஊடல் நிலேத்தது. இந்த ஊடல்தான் கோவலனுடைய காதல் வாழ்வில் நேர்ந்த இடர்ப்பாட்டிற்குக் காரணமாய் அமைந்துவிட்டது. ஊடல் கொண்ட கோவலனே அவனது மனமறிந்து ஊடல் போக்கி மாதவி இன்பம் ஊட்டியதாக ஆசிரியர் ஆங்காங்குக் குறித்துச் செல்கின்ருர்.

> " **கூடலும் ஊடலும்** கோவலர்க்கு அளித்துப்
> பாடமை சேக்கைப் பள்ளியுள் இருந்தோள் "
> —(கடலாடு காதை, வரி 109-110)

> " நிலவுப்பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்
> **கலவியும் புலவியும்** காதலர்க்கு அளித்து ஆங்கு
> ஆர்வ நெஞ்சமோடு கோவலர்க்கு எதிரிக்
> கோலம் கொண்ட மாதவி "
> —(அந்தி மாலேச் சிறப்புச் செய்காதை, வரி 31-34)

இவற்ருல், மாதவி கோவலனுடன் ஊடல் கொண்டு மகிழ்வித்த காதல் வாழ்க்கையை அறியலாம்.

இத்தகைய உயர்ந்த ஊடல் உரிமையால்தான் மாதவி யாழ் வாங்கித் தனக்கு ஏதும் குறிப்பில்லே என்றபோதிலும், குறிப்புடையாள் போலப் பாடத் தொடங்கினுள். கோவலன் பாடிய பாடல்களேக் கேட்டு ஐயம் கொண்டவள், யாழ் மீட்டிப் பாடாமல் தன் ஐயங்களே ஒன்றன்பின் ஒன்ருக அவனேக் கேட்டு

விளக்கிக் கொண்டிருக்கலாம். ஆனால் அவளை அவ்வாறு செய்யாமல் தடுத்தது அவளுக்கிருந்த உரிமை உள்ளம். ஆகவே, அவளும் கோவலன் பாடியது போன்றே பாடத் தொடங்கினாள். கோவலன் பாடிய பாடல்களைவிட ஒரு படி விஞ்சி விட்டாள் மாதவி என்றும் சொல்லலாம்.

பரத்தையர் மரபில் பிறந்தவள்தான் மாதவி என்றாலும், ஒருமை மனம் கொண்டு கோவலனுடன் வாழ்ந்தாள். தன் வாழ்வுக்கு ஊறு நேரும் வகையில் கோவலன் வேறு ஒரு பெண்ணொருத்தியிடம் உறவு கொண்டானே என்று ஐயுற்றபோது அவளது நெஞ்சம் வருந்தியிருக்க வேண்டும். கோவலன் வேறு ஒரு பெண்ணைக் கண்டு அவளிடம் காதல் கொண்டமையால்தான் அங்ஙனம் பாடினான் என எண்ணியவள், தானும் அவன் பாடியது போன்றே பாடவிழைந்தாள்; அவ்வாறே பாடினாள். அவள் எண்ணம் எல்லாம் கோவலன் பாடிய பாடல் கேட்டு எதிராக நாம் பாடுகிறோம் என்றுதான் இருந்திருக்குமே தவிர, இவற்றைத் தவறாகக் கொண்டு கோவலன் தன்னை விட்டுப் பிரிந்துவிடுவான் என்று அவள் எண்ணியிருக்கமாட்டாள்; அதனாற்றான் 'பொழுது கழிந்தது, எழுக', என்று சொல்லி உடன் எழாமல் தன் ஏவலருடன் எழுந்து சென்ற கோவலனைக் கண்டு, அவன் சினந்து வெறுத்துச் செல்கின்றான் என்பதை அறியாமல், ஊடல் கொண்டு செல்கின்றான் என்று எண்ணினாள். உடனே அவளும் வீடு திரும்பினாள்.

மாதவி 'வெள்ளை மனம்' கொண்டவள் என்பதும், உரிமையை எண்ணியே அவ்வாறு பாடினாள் என்பதும், அப்பாடல்களை அவள் பாடி முடித்த பின்பே

தான் கொண்ட மனக்குறையைப் பாடித் தீர்த்தவள் போல இருந்திருக்கக் கூடும் என்பதும் **"கானல் வரி"** யினைப் படிப்பவர் உணரக் கூடும்.

மாதவி இங்ஙனம் கடற்கரையில் பாடிய பாடல்களைச் சிலப்பதிகாரம் "கானல் வரி"யில் படித்து மகிழலாம்.

# 13. கோவலன் குறை

"கடற்கரையில் கோவலன்," "கடற்கரையில் மாதவி" என்னும் இரு கட்டுரைகளையும் படித்த நாம், கடற்கரையில் கானல் வரிப்பாட்டுப் பாடுகையில் கோவலனுக்கிருந்த மனநிலையையும் மாதவிக்கிருந்த மனநிலையையும் அறிந்தோம். இவர்தம் மனநிலைகளைத் தனித்தனியே அறிந்தபோதும், கானல் வரிப்பாட்டின் நிகழ்ச்சிகளுக்கு யார்தான் காரணம் என்ற வினா எழுகின்றது.

கானல் வரிப்பாடல்கள் மரபு வழி வந்த பாடல்கள்; அவை கண்ணன், கொற்றவை முதலிய தெய்வங்களை வழிபட்டுப் பாடும் ஆய்ச்சியர் குரவை, வேட்டுவ வரி போன்றமைந்த பாடல்களேயாகும். இக்கானல் வரிப் பாடல்களே பேரிழப்புக்கள் பலவற்றுக்குக் காரணமாய் அமைந்தன என்பதை அறிந்தோர், அவற்றிற்குரிய காரணம் பற்றி ஆராய்கையில், குறையினை மாதவிபால் சுமத்துகின்றனர்; மாதவிதான் குறையுடையவள் என்றும், அவள் குறையால்தான் கோவலன் பிரிதல் நேர்ந்தது என்றும், அதன் விளைவாகவே பிற எல்லா நிகழ்ச்சிகளும் அமைந்தன என்றுங் கூறுவர்.

"மாதவி பரத்தையர் குலத்தில் பிறந்தவள். அதனால் அவள் கோவலன் பாடிய பாடல்களை உயரிய

மனநோக்குடன் எண்ணுமல் தவருகக் கருதினுள். அவள் குலப் பண்புக்கேற்பவே குணம் அமைந்தது. அதனுல்தான் இத்தொல்லை" என்று சிலரும், "கோவலன் வேறு குறிப்பினன் போலவே பாடினுன் என்ருலும் மாதவியும் அவ்வாறே பாடியது பெருங்குற்றமாம்; குலமகளிர்க்குரிய இயல்பு அஃதன்று. அன்றியும் அவள் அவ்வாறு பாடியதும் அவன் தன்னைத் தவருகவே புரிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடனேயே பாடினுள். அவள் பாட்டில் மாயப்பொய் கலந்திருந்தது. அதனுல் தன்னைப்போலவே அகச்சுவை ததும்பப் பாடினுள் எனக்கொள்ளாமல் வேறு குறிப்பில் பாடினுள் எனக் கொண்டான் கோவலன். எனவே, கானல் வரியில் குற்றங்காணுவதெனின், மாதவிபால் காணவேண்டும் என்னலாம்," என்று சிலரும் முடிவு கொண்டனர். இவ்விரு திறத்தாரின் கருத்துப்படி பார்ப்பின், மாதவிதான் குறையுடையவள் என்ற எண்ணம் ஏற்படுகிறது. இனி மாதவி குறை உடையவளா என்பதைக் காண்போம்:

மாதவி பரத்தையர் மரபில் வந்தவள்தான் என்ருலும் அவள் **சேற்றில் பிறந்த செந்தாமரை** போல மங்கையருள் சிறந்தவளாகவே விளங்குவதைக் காணலாம். கோவலன் பிரிந்த பின்னரும் தாயின் விருப்பத்திற்கு இசையாமல் தான் துறவு பூண்டதுடன் நில்லாது, தன் மகள் மணிமேகலையது கூந்தலைக் களைந்து அவளையும் துறவு கொள்ளச் செய்து, கலையைப் பழி வாங்கிய பெருமையை உடையவள் மாதவி. பரத்தையர் குலத்தில் பிறந்தாள் என்ற ஒரு குறை தவிரப் பிற எக்குறையும் இல்லாது அவள் சிறந்து வாழ்ந்ததை நாம் அறிகிருேம். அவளும் கோவலனும் வாழ்ந்த

வாழ்க்கை **உரிமை வாழ்க்கை** என்பதையும் நாம் அறிய முடிகிறது. கோவலன் மனநிறைவே தன் வாழ்க்கையின் குறிக்கோள் என எண்ணி வாழ்ந்த சிறப்பு மாதவிக்கு உண்டு.

இந்திர விழாவின் இறுதியில் மாதவியின் ஆடலும் கோலமும் அணியும் முடிவு பெறும்போது கோவலன் வெறுப்புற்ற நெஞ்சத்துடன் இருந்ததாக இளங்கோவடிகள் கூறுகிறார். "அவன் ஊடுதற்குக் காரணம் திருநாள் முடி-தலான் வந்த வெறுப்பு. இவள் ஆடலில் காலம் நீட்டித்தலாலும், பலரும் இவளைப் பற்றிப் பார்த்தலின் பொறாமையாலும் வந்த வெறுப்புமாம்" என்கிறார் குறிப்புரைகாரர். இது பற்றி அடியார்க்கு நல்லார் கூறியதென்ன என்பதையுங் காண்போம்: "இந்திர விழாவும், மாதவி ஆடலும் அவ்வாடற்குச் சமைந்த கோலமும் ஆடுதலால் பிறந்த அழகும் முடிதலின் அதனாற் பிறந்த வெறுப்பு...இனி இவள் ஆடலும் கோலமும் தனது அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடிகளைக் கைக்கொண்டு விடுதலாலே பிறர்க்கு இவ்வாறும் என்றும் வெறுப்போடு இருந்தான் எனினும் அமையும்" என்கிறார். (கடலாடு காதை, உரை)

காதலன் வெறுக்கும் நிலையில் தன்னைக் கண்டு பிறர் மயங்க ஆடியவள் அல்லள் மாதவி. கோவலன் வெறுக்குமாறு அவள் தன்னை மறந்தும் நடந்தவள் அல்லள். கோவலனுடைய அன்பையே அவள் பெரிதாக எண்ணினாள். அவனுடைய அன்பையே முதன்மையாக எண்ணிய மாதவி அவன் வெறுக்கும் நிலையில் நெறி பிறழ்ந்து நடந்தவளாகாள். கோவலனுடைய அன்புக்குப் பின்னரே அவள் தான் போற்றி வளர்த்த ஆடலையும் பாடலையும் எண்ணினாள் ; அவனு

டைய அன்பைப் பெற எதனையும் துறந்துவிடும் தூய உள்ளம் கொண்டு விளங்கினாள். இந்த உண்மையை உணரவேண்டுமாயின் மாதவியின் தனிவாழ்வுப் பகுதியைக் காணவேண்டும்:

கோவலன் பிரிந்த பின்பு அவள் வருந்தினாள்; தான் தந்த திருமுகத்தைக் கோவலன் பெற மறுத்த போதிலும், "மாலை வராராயினும் காலை வருவர்" என்று நம்பினாள். அந்த நம்பிக்கைக்குப் பழுது ஏற்பட்ட பின்பு கோவலன் அன்பினைத் தான் இன்னமும் பெறுதல் இயலாது என்று எண்ணிய மாதவி துறவுக்கோலம் பூண்டாள். கோவலன் பிரிவுக்குப் பின்னர் மாதவியிடம் அமைந்த இத்தகைய மாறுபாடுகளே அவளது தூய உள்ளத்தையும் உறுதி உள்ளத்தையும் காட்டுவனவாய் உள்ளன. மாதவிக்கு முதன்மையானது கோவலன் அன்புதான் என்பதைப் பறைசாற்றித் தெரிவிப்பன போல அவை அமைந்துள்ளன.

எனவே, உரையாசிரியர்கள் கூறுவதுபோல கோவலன் வெறுக்குமளவில் மாதவி ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருந்தாள் என்று கூறுவதன்று இளங்கோவடிகளின் கருத்து. அவனுக்கு ஏற்பட்ட வெறுப்புக்குக் காரணம் இன்னதென்று கூறாமலே ஆசிரியர் செல்கின்றார்.

ஆகையால் கோவலன் இந்திர விழாவின் முடிவில் வெறுப்புற்றவனாய் இருந்ததற்குக் காரணம், அவன் மாதவியிடம் கொண்ட வெறுப்பு என்று கூறுவதைவிட, அவன் உற்ற வறுமை பற்றிய கவலையே ஆகும் என்று சொல்லலாம்.

கோவலனுடைய இந்தக் குறையை மாதவி உணரவில்லை. அவன் உற்ற வறுமை நிலையையும் அவள்

அறியாள். அவன் வறுமையால் வாடத் தான் மட்டும் அணிகலன்கள் பல அணிந்து விளங்க மாதவி விரும்பாதவள். அவள் செய்துகொண்ட அழகெல்லாம் கோவலனுக்காகவே என்பதை ஆசிரியர் அவ்வப்போது கூறிச் செல்கின்றார்.

"ஆடலும் கோலமும் அணியும் கடைக்கொள
**ஊடல் கோலமோடு இருந்தோன் உவப்ப**
நாறிருங் கூந்தல் நலம்பெற ஆட்டி...
அழகுற அணிந்து...மாண்புற அணிந்து...
கூடலும் ஊடலும் கோவலற்கு அளித்து...."

(கடலாடு காதை, வரி 74-108)

கோவலனுடைய வெறுப்பைப் போக்கி மகிழ்விப்பதற்காகவே மாதவி தன்னை மிக்க சிறப்பாக அழகு படுத்திக்கொண்டாள் என்று ஆசிரியர் கூறுகின்றார். எனவே, மாதவி பரத்தையர் குலத்தில் பிறந்தவள்தான் எனினும் தனிச் சிறப்புக்களுடன் விளங்கினாள் என்றும், உரிமை பெற்ற காதல் வாழ்வு வாழ்ந்தாள் என்றும் அறிகிறோம்.

கோவலனும் மாதவி மனம் மகிழும்படியெல்லாம் வாழ்ந்தான்; செல்வத்தைச் சிறிதும் எண்ணிப் பாராது அளவற்றுச் செலவிட்டான். நிலையற்ற மனங்கொண்டிருந்த அவன், மனம் வருந்திய பலவேளைகளில் மாதவியின் கூடலைப் பெற்று மகிழ்ந்தான்.

கோவலன் ஆடம்பர அலங்காரத்தை விரும்பி வாழ்ந்தான் என்பதையும், அதனாலேயே மாதவி அவன் மனப் பான்மையை உணர்ந்து நடந்து வந்தாள் என்பதையும் ஆசிரியர் குறிப்பிட்டுச் செல்கின்றார்.

மாதவியுடன் இருந்தபோது மட்டுமல்லாது, அவளை விட்டுப் பிரிந்து சென்ற நிலையிலும் கோவலனு

டைய மனம் ஆடம்பர அலங்காரத்தையே விரும்பி இருந்தது என்பதையும் ஆசிரியர் கூறுகின்றார். நகரினை விட்டுச் சென்றுகொண்டிருந்த கோவலனிடம் கோசிகன் மாதவியின் திருமுகத்தைக் கொடுத்தபோது, அவனுடைய மனத்தைக் கவர்ந்தது அதிலிருந்த நறுமணமே. அந்த மணம்தான் அவனை அத் திருமுகத்தைக் கைவிட முடியாதவாறு செய்துவிட்டது என்று ஆசிரியர் கூறுகிறார்.

“ மாதவி ஓலை மலர்க்கையின் நீட்ட
உடனுறை காலத்து உரைந்த நெய்வாசம்
குறுநெறிக் கூந்தல் மண்பொறி உணர்த்திக்
காட்டியது ஆதலின் கைவிட லீயான்”

(புறஞ்சேரி, வரி 82-85)

இத்தகைய மனப்பான்மையை உடையவன் கோவலன் என்பதறிந்த பின்பு, அவன் மனப்பாங்கிற்கேற்ப மாதவி நடந்தாள் என்பது பொருத்தமாகவே படுகிறது. மாதவி கோவலனுடன் வாழ்ந்தவரை அவனது மனம் மகிழ வாழ்ந்தாள்; அவனைப் பிரிந்த பின்னர் அறநெறியைப் போற்றும் துறவு வாழ்வை மேற்கொண்டாள். இத்தகைய உயர்ந்த பண்புடைய மாதவி பொருளாசை கொண்டு கோவலனை வறியவனாக்கினாள் என்று குறை கூறுவது பொருந்தாது.

“ கோவலன் வேறு குறிப்பினன் போலவே பாடினான் என்றாலும், மாதவியும்அவ்வாறு பாடியது பெருங் குற்றமாம். குலமகளிர்க்குரிய இயல்பு அஃதன்று,” என்று கூறிக் “கானல்வரியில் குற்றங் காணுவதென்றால், மாதவியிடம் காணவேண்டும் என்னலாம்” என்று கூறுவோர் கூற்றினை இனிக் காண்போம்:

மாதவி கோவலனுடைய உண்மைக் காதலியாக இருந்ததால்தான் ஒரு நெறி உடையவளாக வாழ்க்கையில் உறுதியோடு வாழ்ந்தாள். ஆனால் கோவலனிடம் இத்தகைய உறுதியும் நெறியும் காணமுடியவில்லை. அலையும் மனம் கொண்ட நிலையில் மனம் மாறி அலையும் செயல்களைச் செய்த வண்ணமே கோவலன் **இருந்தான்.** மாதவி கோவலனுடைய உண்மைக் காதலியாக இருந்தாள் என்பதற்கு அவள் மொழிகளையே சான்றாகக் காண்போம் :

> " **கண்மணி அனையாற்குக்** காட்டுக என்றே
> மண்ணுடை முடங்கல் மாதவி ஈத்ததும்"
>
> (புறஞ்சேரி, வரி 75-76)

காதலர்க்குப் பிரிவு காலத்தில் பசலை வருவதுண்டு. கோவலனைப் பலகாலமாகப் பிரிந்து வருந்திய கண்ணகிக்குப் பசலை இருந்ததாக ஆசிரியர் கூறவில்லை. ஆனால் கானல் வரிப்பாட்டில் ஊழ்வினை உறுத்து வந்தூட்டக் கோவலன் பிரிந்த அன்றே மாதவி பசலை உற்றதாக ஆசிரியர் கூறுகின்றார்.

> " **பசந்த மேனியள்** படர்வரு மாலை"
>
> (வேனிற் காதை, வரி 68)

பெற்றவர்க்கும் மற்றவர்க்கும் கூறாது நள்ளிரவில் புகார் விட்டுக் கோவலன் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்றதை வசந்தமாலையிடம் கேட்ட மாதவி,

> " வசந்த மாலைவாய் மாதவி கேட்டுப்
> **பசந்த மேனியள்** படர்நோய் உற்று
> நெடுநிலை மாடத்து இடைநிலத்து ஆங்குஓர்
> படைஅமை சேக்கைப் பள்ளியுள் வீழ்ந்ததும்"
>
> —(புறஞ்சேரி, வரி 67-70)

துன்புற்று வருந்தினாள் என்பது ஆசிரியர் கூற்று.

இந்தச் செய்கைகளையெல்லாம் நோக்க, மாதவி வாழ்ந்த வாழ்க்கை **காதல் வாழ்க்கையே** என்பதை நன்குணரலாம். பொருளைப் பெற்று வாழும் நோக்கம் ஒன்றையே அவள் கொண்டவள் அல்லள் என்பதும், அன்பு துணை செய்யக் கணவன் வாழ்வே தன் வாழ்வு என வாழ்ந்த பெருந்தன்மை கொண்டவள் என்பதும் தெளியலாம்.

காதல் வாழ்வில் மிளிர்வதுதான் **ஊடல் உரிமை.** கண்ணகியின் வாழ்வில் ஊடல் நிகழ்ந்ததாகக் குறிப்புக்கள் இல்லை. கோவலன் வாழ்க்கையில் நேர்ந்த இடர்ப்பாட்டிற்கு இதனையும் ஒரு காரணம் என்று கூறலாம். கோவலன்-மாதவி வாழ்க்கையில் ஊடல் நிகழ்ந்து வந்தது. கலைப்பித்தும் இன்ப வாழ்வுமே குறிக்கோளாகக் கொண்டு மயங்கிய கோவலனிடம் மாதவி ஊடினாள் என்பதாலேயே அவள் அவனிடம் ஒரு பரத்தையாக வாழ்ந்திடவில்லை என்று கூறலாம். காதல் வாழ்க்கையாக இருந்த காரணத்தால்தான் மாசற்ற மனைவியையும் மறந்து மாதவியின் வீட்டிலேயே கோவலன் மகிழ்ந்திருந்தான். இந்த உண்மையை ஆசிரியர்,

> "விடுதல் அறியா விருப்பினன் ஆயினன்
> வடுநீங்கு சிறப்பின்தன் மனையகம் மறந்தென்"
>
> (அரங்கேற்று காதை, வரி 174-175)

என்று கூறுகிறார்.

கோவலனைக் கடற்கரையில் பிரிந்து, வருந்திய நெஞ்சுடன் மாதவி திரும்பும்போது வண்டியில் ஏறிச் சென்றதாகக் கூறாது, வையத்தின் உள்புக்கு மனைபுக்காள் என்று ஆசிரியர் கூறுகிறார்.

"கையற்ற நெஞ்சினளாய் வையத்தி னுள்புக்குக்
காதலனுடன் அன்றியே மாதவிதன் மனைபுக்காள்"
(கானல்வரி, வரி 52)

மாதவி ஊடல் உரிமை கொண்டதால்தான் கோவலன் வீட்டையும் மனைவியையும் மறந்து, அவளுடன் உறைந்து வாழலானான். மாதவி கோவலன் பாடலைக் கேட்ட பின்பும் அதே ஊடல் உரிமையைத்தான் பயன்படுத்திக்கொண்டு பாடத் தொடங்கினாள் என்று கொள்ளுவதே பொருந்தும். மாதவி மனத்தில் எந்த விதமான குறிப்பும் இல்லையென்றபோதிலும், கோவலனுடன் அதுவரையும் தான் பாராட்டிவந்த ஊடல் உரிமையைக் கொண்டு ஒரு குறிப்புடையவள் போலப் பாடத் தொடங்கினாள். இதனை ஆசிரியர்,

"கானல்வரிப் பாடல்கேட்ட மானெடுங்கண் மாதவியும்
மன்னும்ஓர் குறிப்புண்டு இவன் தன்னிலை மயங்கினான் எனக்
கலவியால் மகிழ்ந்தாள்போல் **புலவியால்** யாழ்வாங்கி"
—(கானல் வரி, 24)

என்று கூறுகின்றார். கோவலன் ஒரு குறிப்புக் கொண்டு தன்னிலை மயங்கிப் பாடினான் என்று மாதவி எண்ணினாள் என்றும், ஆயினும் அவளுக்கு அத்தகைய குறிப்புக்கள் ஏதும் இல்லை என்றபோதிலும் **புலவியால்**யாழ் வாங்கி மகிழ்ந்தவள் போலப் பாடத் தொடங்கினாள் என்றும் ஆசிரியர் கூறுகின்றார்.

கோவலன் குறிப்புடன்தான் பாடினான் என மாதவி ஐயுறுதல் சரியா எனின், அவள் ஐயுற்றது பொருத்தம்தான் என்பது புலனாகும். மாதவியின் அழகையும் அவளிடமிருந்த கலையையுமே கண்டு அவளுடன் கோவலன் வாழத் தொடங்கினான். கலைப்

பித்தும் அலையும் மனமுங் கொண்டவன் கோவலன் என்பதையும் மணமான பின்பு மனைவியை விட்டுத் தன்னிடம் வாழ்பவன் என்பதையும் அவள் அறிவாள்; மனைவியையே விட்டுத் தன்னுடன் வாழ்பவன் பிற ஒருத்தியை நாடுவது கூடும்; அதனால்தான் கோவலன் ஊடல் கோலமோடிருந்த போதெல்லாம் அவள் ஊடல் தீர முதலில் கூடல் நல்கித் தன்னைக் காத்து வந்தாள். கோவலன் மனத்தை நன்குணர்ந்த மாதவி அவனுடைய நெகிழ்ந்த நெஞ்சைக் கொண்டு அவனை ஐயுற்றதில் வியப்பில்லை. அதனாற்றான் அவள்,

"மன்னு மோர் குறிப்புண்டு இவன் தன்னிலை மயங்கினான்"

என எண்ணியதாக ஆசிரியர் கூறுகின்றார். இந்த எண்ணம் மாதவியின் உள்ளத்தில் திடீரெனத் தோன்றவில்லை. அவன் சிலகாலமாகவே தன்னிடம் மாறுபட்டு நடந்து வந்ததைக் கண்ட போதெல்லாம் இந்த எண்ணம் அவள் உள்ளத்தில் இருந்திருக்க வேண்டும்.

மாதவி எதிர்த்துப் பாடவில்லை. அவள் ஊடல் உரிமையால் அவ்வாறு பாடினாள் என்பதை இதுகாறும் கண்டவற்றால் நாம் துணிந்து கூறலாம்.

ஊடல் சிறப்பினைக் கூறவந்த வள்ளுவர், "கணவரிடம் தவறு ஒன்றும் இல்லையாயினும், ஊடுதல் அவருடைய அன்பைப் பெற்றுத் தரவல்லதாகும். ஊடல் என்பது உணவுக்கு உப்பு அமைவது போன்றது. சிறிய ஊடலும் முதிர்ந்த ஊடலும் இல்லையாயின், காமம், அழிந்து பழுத்த பழமும் நன்கு அமையாத காயும் போன்றது" என்றெல்லாம் கூறிச் செல்கின்றார்.

"இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவர்அளிக்கு மாறு."

" உப்புஅமைந் தற்ருல் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்."

" துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று."

எனவே, ஊடல் உரிமையற்ற வாழ்க்கை சிறந்த வாழ்க்கையாகாது என்பதை அறியலாம்.

கோவலன் பாடிய பாடலைக் கேட்டதும் மாதவி எவ்விதக் குறிப்பும் இல்லாத நிலையில் பாடினுள். அவள் பாடலைக் கேட்டதும் கோவலன் அவளை ஐயுற்ருன்; ஐயுற்றவன், பல ஆண்டுகளாகக் கண்ட மாதவியின் பேரன்பை, 'மாயப் பொய்' என்று எண்ணிவிட்டான்; அந்த எண்ணம் கொண்டவுடன் அவளை வெறுத்து எழுந்து பிரிந்துவிட்டான். ஆசிரியர் உள்ளம் அதைக் கூறும்போது வருந்துகிறது. பொழுது சாய்ந்த நிலையில் மாதவியை உடன் வரச் சொல்லிப் புறப்படாமல் கோவலன் தனியே விட்டு விட்டுச் சென்ருன். அவன் சொல்லாமலேயே எழுந்து சென்ருன் என்று கூறி ஆசிரியரும் வருந்தி, நம்மையும் வருத்தம் கொள்ளச் செய்கின்ருர்.

" உவவுற்றதிங்கள்முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தனனுய்ப்
பொழுதிங்குக் கழிந்தது ஆகலின் எழுதும்என்று உடன் எழாது
ஏவலாளர் உடன்சூழ்தரக் கோவலன்தான் போன பின்னர்"

(கானல் வரி, 52)

மாதவி எந்த விதத்திலும் குறையற்றவள் என்பதைக் கோவலன் உணர்ந்து கூறுகின்ருன். அவன் அவளை, "மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள்" என்றும், "சலம்புணர்கொள்கைச் சலதி" என்றும் பழித்தான். பின்பு அவனே அவற்றை எல்லாம் மறந்து விட்டு,

" தன்தீது இலள்எனத் தளர்ச்சி நீங்கி
என்தீது......................................."

(புறஞ்சேரி, வரி 94-95)

என்று கூறுகின்ருன்.

இதுகாறும் கண்டவற்றால், மாதவி கோவலனிடம் காதல் கொண்டு **காதல் வாழ்க்கை வாழ்ந்தாள்** என்பதும், குலப் பிறப்புணர்ச்சி அவளிடம் அமையவில்லை என்பதும், கானல்வரிப் பாட்டில் கோவலன் பாடியதற்கு எதிராக அவள் பாடியது உரிமை உணர்ச்சியின் விளைவுதான் என்பதும் நன்கறியலாம்.

"பொதுமகள், விலை மகள், வரைவின் மகள் என்றெல்லாம் கூறிக் கட்டாயப்படுத்திப் பெண்ணைக் கெடுக்கும் கொடுமை இருந்த சமூகத்தில் வாழ்ந்த மாதவி, அத்தகைய சமூகக் கொடுமைக்கு இரையாகாமல், கோவலனுடைய காதலியாக ஒரு நெறிப்பட்டு வாழ்ந்ததை எண்ணும்போது, மாதவியைக் குறை கூறுவதே குற்றம் எனத் தோன்றும். குறை கூறுவதற்கு மாறாக, அவளைப் போற்றிப் புகழவே தோன்றும்," என்னும் டாக்டர் மு. வரதராசனார் கூற்று, கோவலனே குறையுடையவன் என்பதைக் கூறா நிற்கும்.

மாதவியின் பாடலைக் கேட்டவுடன் கோவலன் சற்றும் சிந்தியாமல், 'மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள்' என்று சொல்லி, அவளைத் தனியே விட்டுச் செல்கின்றோமே என்றும் எண்ணாமல், அவளை எழுந்து வருமாறும் கூறாமல் சென்றதே அவன் நிலையிழந்த நிலையைப் புலப்படுத்துகின்றது. கோவலன் இவ்வாறு எண்ணித் துணியாது செய்த செயலே பின் விளைவுகட்கெல்லாம் காரணமாய் அமைந்துவிட்டது. எனவே, **கோவலன்தான் குறையுடையவன்** என்று கானல் வரிப் பாடல்களைக் கொண்டு தெளிவுறக் கூறலாம்.

# 14. காதலர் வாழ்வு

பெற்றவரும் மற்றவரும் மகிழும்படி கோவலன் கண்ணகியை முறைப்படி மணந்தான்; மாதவியை அவள் கற்றுத் தேர்ந்த கலைகளில் மயங்கித் தானே விரும்பிப் பிறர் கருத்தில்லாமல் சேர்ந்து வாழ்ந்தான். கோவலனுடைய காதலியரான இவ்விருவரும் வெவ் வேறான வாழ்க்கை முறையில் வாழ்ந்தனர்.

**கண்ணகி**யின் வாழ்க்கை முதலிலேயே பண்பட்டு அமைந்துவிட்டது. மகளுடைய எதிர்கால நல்வாழ் வில் கருத்துக் கொண்ட தாயும் தாய்வழிப் பிற பெண் டிரும் அவளுக்கு அவ்வப்போது இளமையிலேயே தக்க வாறு அறிவுரைகள் புகன்றிருக்கக் கூடும். மற்றவர் வாழ்வில் நடைபெற்ற நிகழ்ச்சி முறைகளைத் துணை யாகக் கொண்டு தங்கள் அறிவுரைகளை வகைப்படுத்தி யும் அவர்கள் கூறியிருக்கலாம். மணமான பின்பு வாழ்வு வளமாக அமைய வேண்டும் எனின், அன் புக்கே முதலிடம் தருதல் வேண்டும் என்றும், உரிமைப் போராட்டம் தலையெடுக்காமலிருப்பதே நல்லது என் றும், அவள் பிறர் சொல்லக் கேட்டுக் கேட்டுப் பண் பட்டுவிட்டாள்; அதனால்தான், "யாவதும் மாற்றா உள்ள வாழ்க்கையேன்," என்று கோவலனிடம் தன் வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிட்டாள். மணமான பின்பு கணவனே கடவுள் என்று அவள் இளமை

யிலேயே கேட்டுப் பக்குவம் பெற்றதால்தான், 'மாதவி பால் மயங்கி வாழும் கோவலனை அடைந்து என்றும் இன்பமாய் வாழச் சோம குண்டம் சூரிய குண்டத்தில் மூழ்கிக் காமனை வழி படுவோம், வருக, என அழைத்த தேவந்திக்குப் 'பீடன்று' என்று பதிலுரைக்க அவளால் முடிந்தது; குடும்பப் பண்பாடு அவளை விட்டு நீங்கவில்லை.

**மாதவி**யின் வாழ்க்கை கண்ணகியின் வாழ்க்கையைப் போல முதலிலேயே பண்படாத வாழ்க்கை; படிப்படியாகப் பண்பட்ட வாழ்க்கை. குறைகள் மிகுந்த சூழலில் வாழ்ந்த அவள், குணம் நிறைந்தவளாய் வாழும் வாழ்க்கையைப் பெற்றாள். பிறந்த குடியை எண்ணியும் வாழ்ந்த வாழ்வை எண்ணியும் தன்னால்—தன் உரிமை விழைவால்—நேர்ந்த குறையை எண்ணியும் வருந்தியும் திருந்தியும் உயர்நிலை பெற்ற பெருவாழ்வு வாழ்ந்தவள் மாதவி.

கண்ணகி தன் வாழ்க்கைக்கு அடிப்படையாக அன்பைக் கொண்டாள். உரிமையைப் பற்றி அவள் எண்ணியதாகத் தெரியவில்லை. கோவலன் மாதவியிடம் பல ஆண்டுகள் வாழ்வதைக் கண்ட போதும், அவ்வப்போது தன்னிடம் வந்து பொருள் பெற்றுச் சென்றபோதும், உரிமை உள்ளம் கொண்டு கண்டிக்காமல் அன்பொன்றையே எண்ணி என்றேனும் ஒரு நாள் கோவலனிடம் இன்பமாக வாழலாம் என எண்ணினாள்; அதனால்தான், மாதவியுடன் கூடிப் பெரும் பொருள் தொலைத்த செயல் நாணத்தைத் தருகின்றது என்று கூறிய கோவலனிடம் நகை முகம் கொண்டவளாய், "சிலம்பு உள, கொள்க" என்றாள்; உரிமையைப் பயன்படுத்திக் கணவனைக் கண்டிக்கும்

வாய்ப்புக் கிடைத்தபோதும், அன்பை எண்ணி உரிமையை மறந்தவளானாள்; 'மதுரைக்குப் புறப்படுக' என்று கோவலன் உரைத்தபோதும் ஒன்றும் கேளாமல் ஏதும் கூறாமல் புறப்பட்டாள்; அதனால் ஓரளவு வெற்றியும் பெற்றாள் .மாதரி; வீட்டில் சிலம்பு கொண்டு விற்றுவரப் புறப்படும் திருந்திய மனம் கொண்ட கோவலனுடைய அன்புக் கண்ணீரைக் கண்டாள்.

கடற்கரையில் கோவலன் வரிப்பாடல் பாடியதைக் கேட்டதும் மாதவி ஐயம் கொண்டாள்; கோவலன் தன்னை விட்டுப் பிற ஒருத்தியை நாடுவானோ என்று எண்ணிக் கலங்கினாள். அவள் அவ்வாறு கலங்கியமைக்குக் காரணம் உண்டு. அவள் பொதுமகளிர் மரபில் வந்தவள்; ஆயினும், மனமொத்த காதலனுடன் இன்ப வாழ்வு நடத்தியவள். இந்த நிலையில் கோவலன் பிற ஒருத்தியை நாடுவானேயாயின், தான் மீண்டும் குடும்பத் தொழிலை மேற்கொண்டு வாழ நேரிடின், அதுகாறும் வாழ்ந்த புனித வாழ்வு பாழாகிவிடுமே என்று எண்ணிக் கலங்கினாள் எனக் கொள்ளலாம். இந்த எண்ணம் அவளுக்கு அப்போது இருந்ததால்தான் அதனைப் படிப்படியாக வளர்த்துக்கொண்டாள்; கோவலன் தன்னைக் கைவிட்டுவிடின், மீண்டும் எக்காரணம் கொண்டும் இல்லறத்தில் ஈடுபடாமல் துறவறத்தை மேற்கொள்வது என்று துணிந்தாள். கோவலன் இறந்த பின் மாதவி துறவறத்தை மேற்கொண்டதே இதற்குச் சான்றாகும். மாதவி **உரிமைக்கே** முதலிடம் தந்தாள். அதனால் ஊடல் நிகழ்ந்தது; மகிழ்ச்சியாக வாழ்தல் முடிந்தது; அதனால்தான் கானல் வரிப் பாட்டைக் கேட்டதும் ஐயம் கொண்டு ஊடினாள். ஆனால் ஊடல் விபரீத

விளைவைத் தந்துவிட்டது; உரிமைப் போர் வெற்றி தராததைக் கண்டு வருந்தினாள். தான் கண்ட ஏமாற்றத்தைப் பொறுமல் வருந்தினாள்; வருத்தத்தினின்றும் விடுதலை பெறக் காதலன் மாண்டபின் துறவறம் மேற்கொண்டாள். காதலனை இழந்த மாதவி கலையையும் காதலையும் வெறுத்தாள்—துறந்தாள்.

கண்ணகி கணவனுக்காகவே வாழ்ந்து கணவனுக்காகவே மாண்டாள். அவளுடைய வாழ்வு அத்துடன் முடிந்தது.

மாதவி காதலனுடன் இன்பமாக வாழ்ந்தாள்; அவன் இறந்த பின்பு தூயநெறியைமேற்கொண்டாள்; கணிகையர் வாழ்வுக்கும் தனக்கும் தொடர்பில்லை என்பதை உலகறியச் செய்ய, தன் வயிற்றில் பிறந்த மணிமேகலையைத் தமிழகத்துக்கு உரிய தவச் செல்வியாக்கினாள்; இங்ஙனம் பிறந்த குடும்பத்தின் தீமையைப் போக்கிப் பெருமை பெற்றாள்.

கோவலன் கண்ணகியிடத்தும் காதல் கொண்டான்; மாதவியிடத்தும் காதல் கொண்டான்; கண்ணகியுடன் வாழ்ந்தபோது எளிமையையும் அன்பையுமே கண்டான்; ஆடலையோ பாடலையோ காணவில்லை; மாதவியிடம் வாழ்ந்தபோது அன்பையும் கண்டான்; ஆடல் பாடல் அழகுக் கலைகளின் திறத்தைக் கண்டு வியந்து மகிழ்ந்தான்; சிறந்த சுவைஞனாக வாழ்ந்தான்; நெருக்கடி நேர்ந்தபோது கண்ணகியை நினைந்து அவளுக்காக வருந்தினான்; மாதவியை வெறுத்துப் பிரிந்தான்; பின்னர் அவள் குற்றம் அற்றவள் என்று துணிந்தான்; கண்ணகி மனம் மகிழ வாழ எண்ணினான்; அதற்குள் அவனது வாழ்வே முடிந்துவிட்டது.



